70 மெய்மறக்கும் சுவையுடன் கோடை விடுமுறையை கொண்டாடுங்கள்.






**சுட்டிக் குழந்தைகளே !**

அருண் ஐஸ்க்ரீமின் விதவிதமான சுவைகளுடன் சம்மர் லீவை

என்ஜாய் பண்ணுங்க !

70
மெய்மறக்கும்
சுவைகள்



All New
Arun
ICECREAMS



பட்டணத்து ஆளுக்குள்ள பட்டிக்காட்டான்
ஏப்ரல் மே-யில எட்டிப்பாப்பான்



ஏப்ரல்-மே
தூள்
போத்தீஸின்
கோடை திருவிழா



போத்தீஸ்
அழகிய ஜவுளிகளின் ஆலயம்
சென்னை ❖ திருநெல்வேலி ❖ ஸ்ரீவில்லிபுத்தூர்

ஜவுளி எடுங்க. ஜாலியா இருங்க.

Ideopraxist

ஆய மிமிமி

சிறப்புப் படைப்பாக மி கிய 218 ஷி 3115 னி கி 4



மிவிமிப ரிவிபி 24



நிவுனிணிதிஷி கி தி 2:



ஈ·ப யிம ரிஷிநி கி திகிற 37



வீ ரிணிய 56

## பொருளடக்கம்




**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.120/- புக்போஸ்டில் உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.

SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**

***Remittances in favour of Chandmama India Ltd.***

to

Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail :
subscription@chandamama.org



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# வானம் பொழிகிறது, ஆயினும் தாகம் தணியவில்லை

மே மாதம் வரும் போதே, இந்தியாவின் பல பாகங்களில் குடி தண்ணீர் பஞ்சமும் கூடவே வந்து விடுகிறது. ஜூன் மாதம் துவங்கும் தென்மேற்குப் பருவக் காற்று முதலில் கேரளத்தில் ஆரம்பித்து மேற்கு கடற்கரைப் பகுதிகளுக்குச் சென்று, இந்தியாவின் வடகிழக்குப் பகுதிகளுக்குச் சென்று ஜூலை மாதம் வரை நல்ல மழையைக் கொடுக்கிறது. இந்தியாவில் ஓராண்டிற்கு சராசரியாக 2000மி.மீ மழை பெய்கிறது. அப்படியிருந்தும் சில பகுதிகளில் வெள்ளமும், மற்ற பகுதிகளில் வறட்சியும் காணப்படுகின்றன. சில சமயங்களில் நன்றாக மழை பெய்யும் பகுதிகளில் கூட கோடையில் தண்ணீர்ப் பஞ்சம் ஏற்பட்டு விடுகிறது.

வானம் இவ்வாறு கருணை காட்டியும், நாம் தண்ணீர் இல்லாமல் வாடுவதேன்? ஏனெனில் இயற்கையளிக்கும் செல்வத்தை நாம் முறையாகப் பாதுகாப்பதில்லை. தண்ணீர் கிடைக்கும் காலத்தில் அதைச் சிக்கனமாக செலவு செய்யாமல் பல முறைகளில் வீணாக்குகிறோம். சமையலுக்கு, குளிப்பதற்குப் பயன்படும் நீரை கழிவு நீர்க் குழாய்க்கு அனுப்பாமல், அதை தோட்டத்திற்குப் பயன்படுத்தலாம். மழை பெய்யும் போதே அது வீணாக கழிவு நீர்க் குழாய்க்குச் செல்லாமல், நமது கிணறுகளில் தேக்கி சேமித்து வைத்துக் கொள்ளலாம்.

இயற்கை நமக்கு தாராளமாக அளித்துள்ள செல்வங்களில் தண்ணீரும் ஒன்று. ஆகவே தண்ணீர் இருக்கும் போது அதை சேமித்து வைக்கவும் கற்றுக் கொள்வோம்.

*ஆசிரியர் :* **விஸ்வம்**





அம்புலிமாமா



# வாசகர்களுக்கு அன்பு வேண்டுகோள்

அன்பார்ந்த வாசகர்களுக்கு,

'அம்புலிமாமா'வை வெளியிடப் பயன்படும் நியூஸ் பிரின்ட் பத்திரிகைக் காகிதத்தின் விலை அண்மையில் மிக மிக உயர்ந்து விட்டது. ஆயினும் நம் பத்திரிகையின் விலையை உயர்த்தாமல் இருக்க வெகுவாகப் பாடு பட்டோம். ஆனால் தற்போதுள்ள விலையில் பத்திரிகையை வெளியிடுவது இயலாது என்ற நிலை உருவாகி இருப்பதால் அடுத்த இதழில் இருந்து 'அம்புலிமாமா'வின் விலையை அதிகரித்தே ஆக வேண்டி உள்ளது.

இதனால் ஜூலை 2004 முதல் அம்புலிமாமா தனிப்பிரதி விலை 12 ரூபாய், வருட சந்தா 144 ரூபாய் என ஆகிறது.

நீங்கள் கண்டிப்பாக ஒத்துழைப்பீர்கள் என்று நம்புகிறோம். இந்த சந்தர்ப்பத்தில் நல்ல கதைகளுடன் மேலும் வித்தியாசமாக அம்புலிமாமாவை அமைத்து வெளியிடுவோம் என வாசகர்களுக்கு உறுதி கூறுகிறோம்.

நன்றி,

பி.விஸ்வநாத ரெட்டி
(வெளியீட்டாளர்)



# நண்பனை சகோதரனாக நினை

உங்களது நண்பன் ஒருவன் தான் உண்ணும் தின்பண்டத்தின் சிறு பகுதியை உங்களுக்குக் கொடுத்துவிட்டு, தான் பெரிய பகுதியாக எடுத்துக் கொண்டால் உங்களுக்கு எப்படியிருக்கும்? சுயநலக்காரன் என்று உங்கள் நண்பனைப் பற்றி எண்ணுவீர்கள் இல்லையா? நாம் அந்த நண்பன் இருக்கும் இடத்தில் இருந்தால், நாமும் சுயநலக்காரனாகத்தான் இருப்போம். ஆனால் தன் சிறு வயதிலிருந்தே சுயநலம் சிறிதுமில்லாது நியாய உணர்வுடன் நடந்து கொண்ட, ஒரு முக்கியமான நபரைத் தெரியுமா?

ஒருமுறை அந்தச் சிறுவனின் அன்னை, தன் பிள்ளை சாப்பிடுவதற்காக தட்டில் ஒரு சப்பாத்தி எடுத்துக் கொண்டு வந்தாள். அவனுடன் விளையாடிக் கொண்டிருந்த அவனுடைய நண்பனைக் கண்டவுடன், அந்த சப்பாத்தியை இரு துண்டுகளாக்கி தன் பிள்ளையிடம் கொடுத்து, ''இந்த பெரிய துண்டு உனக்கு. சிறியது உன் நண்பனுக்கு,'' என்று சொன்னாள். ஆனால் அவன் பெரிய துண்டை தன்னைவிட வயதில் பெரிய நண்பனுக்கும், சிறிய துண்டை தானும் எடுத்துக் கொண்டான். இதைக் கண்டு சிறுவனின் அம்மா, ''ஏன் இப்படிச் செய்தாய்?'' என்று கேட்டாள்.

அந்தச் சிறுவன் அதற்கு, ''நண்பன் என்பவன் சகோதரனுக்கு சமமானவன் என்று நீ என்னிடம் சொல்லியிருக்கிறாய் அல்லவா? ஆகவே என்னைவிட வயதில் பெரியவனான நண்பன் எனக்கு அண்ணன் ஆகிறான். ஆகவே அவனுக்குப் பெரிய துண்டை கொடுத்து விட்டு, தம்பியாகிய நான் சிறியதை எடுத்துக் கொண்டேன்,'' என்று பதில் அளித்தான். தன் பிள்ளையின் பதில் கேட்டு அம்மா ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைந்தாள். சிறு வயதிலிருந்தே இப்படிப்பட்டி மேம்பட்ட சிந்தனைகளுடன் இருந்த அந்தச் சிறுவன் வளர்ந்து பெரியவனாகி மும்பை உயர் நீதிமன்றத்தில் நீதிபதி ஆனான். அந்தச் சிறுவன்தான் பாரதத்தில் புகழ்பெற்ற மகாதேவ் கோவிந்த ரானடே.



# உதவிக்கு கைம்மாறு

ஒரு கிராமத்தில் பிரேமநாதன் என்றொரு ஏழை இருந்தான், கைம்மாறு கருதாமல் பலருக்கும் உதவி செய்து வந்த அவனைப் பார்த்து, அந்தக் கிராமத்து புரோகிதர் அவனுக்கு அடிக்கடி அறிவுரை கூறுவதுண்டு. ''பிரேமநாதா! அழுத பிள்ளைக்குத்தான் பால் கிடைக்கும். எல்லோருக்கும் நீ உதவி செய்து வருகிறாய். ஆனால் யாரிடமிருந்தும் எந்த உதவியையும் நீ கேட்டுப் பெறுவதில்லை. அவ்வப்போது மற்றவர்களிடமிருந்து உதவிகளைக் கேட்டுப் பெற்றுக் கொள்'' என்பார்.

''பலனை எதிர்பார்த்து மற்றவர்களுக்கு உதவி செய்வது சரியல்ல. என்னுடைய உழைப்புக்குத் தகுந்த கூலி எனக்குக் கிடைத்து விடுகிறதே, அதுவே போதும். எஞ்சியிருக்கும் நேரத்தில், மற்றவர்களுக்கு என்னால் முடிந்த உதவிகளை செய்கிறேன். இப்போது தேவையில்லை எனினும், பிற்காலத்தில் எனக்குத் தேவைப் பட்டால், மற்றவர்கள் எனக்கு உதவி செய்வார்கள் என்று நம்புகிறேன்'' என்று பதிலளிப்பான் பிரேமநாதன்.

அந்த கிராமத்தில் இருந்த செல்வந்தர் ரங்கநாதன் பிரேமநாதனின் இந்த சுபாவத்தை அறிந்து கொண்டு, அவனிடம் நிறைய உதவிகளைக் கேட்டுப் பெற்று வந்தார். நோயாளியான ரங்கநாதனின் தாயாருக்கு மருந்து வாங்கிக் கொடுக்கும் பணியினை அவனுக்குக் கொடுத்தார். அவர் வியாபாரியாயிருந்ததால், அத்தியாவசியப் பொருட்களின் விலைவிவரங்கள் அடிக்கடி தெரிய வேண்டி வந்த போதெல்லாம், அந்தப் பணிகளில் பிரேமநாதனை ஈடுபடுத்துவார். முக்கியமான நபர்களுக்கு தகவல்கள் அனுப்பும் பணியையும் அவனுக்கு ஒப்படைத்தார். எந்தப் பலனையும் எதிர்பாராமல் அவர் சொன்ன வேலை

- இரகுநாத மிஷ்ரா -

களெல்லாம் பிரேமநாதன் செய்து வந்தான்.

பிரேமநாதனின் மகளுக்குத் திருமணம் நிச்சயிக்கப்பட்டது. ஆனால் அதற்கு வேண்டிய பணம் அவனிடம் இல்லாததால் கிராமத்துப் புரோகிதர் பிரேமநாதனை, செல்வந்தரான ரங்கநாதனைப் போய் பார்த்து உதவி கேட்கும்படி அறிவுரை கொடுத்தார்.

இது சரியான யோசனையாகத் தோன்றவே, பிரேமநாதன் ரங்கநாதனிடம் சென்றான். ''ஐயா, உங்களிடம் உதவி கேட்டு வந்துள்ளேன்,'' என்று கூறிய பிரேமநாதனின் வார்த்தைகளைக் கேட்டதுமே, ரங்கநாதன் ஆச்சரியம் அடைந்தவர் போல் நடித்து, ''உதவியா! உனக்கா! நீ யார்? உன்னைப் பார்த்ததில்லையே,'' என்று கூசாமல் பொய் சொன்னார். ''இதென்ன இப்படிக் கேட்கிறீர்கள்? என்னைத் தெரியாதா?'' என்று கேட்ட பிரேமநாதன்தான் அவருக்காக இதுவரை செய்த உதவிகளுக்கான ஒரு பட்டியலே தந்தான்.

''தினமும் ஆயிரக்கணக்கான ஆட்களுக்கு வேலை கொடுக்கிறேன். எல்லோரையும் ஞாபகம் வைத்துக் கொள்ள முடியுமா? என் அம்மாவுக்கு மருந்து வாங்கித் தந்தேன் என்கிறாயே, வா, உன்னை என் அம்மாவிடமே அழைத்துப் போய் உன்னைத் தெரியுமா என்று கேட்கிறேன்,'' என்று கூறி தன் தாயிடம் அழைத்துச் சென்றார். ஆனால் அவர் தாயோ, ''இவனை



ஒருநாள் மருந்து வாங்கி வரச் சொன்னேன். இவன் மறுத்து விட்டான். அதற்குப்பிறகு இவனிடம் எதுவும் கேட்கவேயில்லை,'' என்று பொய் பேசினாள். அதிர்ச்சியும், ஏமாற்றமும் அடைந்த பிரேமநாதன் வீட்டுக்குத் திரும்பும் வழியில் புரோகிதரைப் பார்த்தான். நடந்ததை அறிந்த புரோகிதர், ''உனக்கு வஞ்சகம் செய்கிறான். உன்னை ஏமாற்றப் பார்க்கிறான். நீ மறுபடியும் சென்று அவன் மனைவிக்கு நீ செய்த உதவிகளைச் சொல்லிப்பார். அப்படியும் உன் வேலை நடக்கவில்லையென்றால், ரங்கநாதன் நினைவில் என்றும் நிற்கும் படி துணிச்சலான காரியம் ஏதாவது செய்துவிட்டுவா,'' என்று கூறி அனுப்பினார். மீண்டும் ரங்கநாதன் வீடு அடைந்த பிரேமநாதன், அவரையும்



அவர் மனைவியையும் சேர்ந்தே சந்தித்தான். ''ஐயா, உங்கள் மனைவிக்கு நான் ஏராளமான உதவிகள் செய்திருக்கிறேன். அவர்களைக் கேட்டுப் பாருங்கள்,'' என்று சொல்ல ரங்கநாதன் தன் மனைவியை நோக்கி, ''இவன் ஏதோ உனக்கு உதவி செய்ததாக கதை விடுகிறான். இவனை உனக்குத் தெரியுமா?'' என்று வினவ அவரது மனைவி, ''தெரியாமல் என்ன! இவன் ஒரு சோம்பேறி. இவன் எனக்கு ஒரு உதவியும் செய்ததில்லை,'' என்று அழகாகப் பொய் சொன்னாள். இதைக் கேட்ட பிரேமநாதனின் கோபம் எல்லை கடந்தது. ''உங்கள் குடும்பத்திற்காக எவ்வளவோ உதவிகளை செய்துள்ளேன். இப்படி எல்லாவற்றையும் மறந்து நன்றி கெட்டவர்களாக இருப்பீர்கள் என நினைக்கவில்லை,'' என்று கோபத்துடன் சொன்னான். எரியும் தீயில் எண்ணெய் ஊற்றுவது போல், இதுகேட்டுப் பெரிதாக சிரித்த ரங்கநாதன், ''என்னைப் போன்ற பெரிய மனிதனுக்கு உதவி செய்தால் கௌரவம் என்பதற்காக எனக்கு பலர் சில உதவிகளை செய்கின்றனர். அப்படி செய்பவர் யாவரையும் என்னால் ஞாபகத்தில் வைத்திருக்க முடியாது. நீ ஏதாவது செயற்கரிய செயல் புரிந்தால் உன்னை ஞாபகம் இருக்கும்,'' என்று கேலி செய்தார். ''ஐயா, போனதெல்லாம் போகட்டும். என்னை உங்களுக்குத் தெரியாது என்றே வைத்துக் கொள்வோம். பரவாயில்லை. ஆனால் எனக்கு என் மகளின் திருமணத்தின் பொருட்டு கொஞ்சம் பண உதவி மட்டும் செய்து விடுங்கள், அது போதும்'' என்று பிரேமநாதன் கெஞ்சினான்.

''அடேய், மீண்டும் மீண்டும் ஏன் என்னைத் தொந்தரவு செய்கிறாய்? நீ யாரென்றே எனக்குத் தெரியாது,'' என்று இரக்கமின்றி கூறிய ரங்கநாதனின் வார்த்தைகள் பிரேமநாதனை ஆவேசம் கொள்ளச் செய்ய, 'பளாரெ'ன்று ரங்கநாதன் கன்னத்தில் ஓர் அறை விட்டுவிட்டுச் சென்று விட்டான்.

அதிர்ச்சியும் அவமானமும் அடைந்த ரங்கநாதன் நேராக கிராம அதிகாரியிடம் சென்று பிரேமநாதனைப் பற்றி முறையிட்டார். அதைக்கேட்ட கிராம அதிகாரி பிரேமநாதனை அழைத்து வர ஆணையிட்டார். பிரேமநாதனுக்கு பதிலாக

புரோகிதர் தான் போவதாகச் சொல்லி பஞ்சாயத்திற்கு வந்தார். பிரேம நாதனுக்கு உடல் நிலை சரியில்லாத தால், தான் அவனுக்குப் பதிலாக வந்ததாக புரோகிதர் பஞ்சாயத்து சபையில் கூறினார். கிராம அதிகாரி பிரேமநாதன் இந்தக் குற்றச்சாட்டுக்கு என்ன பதில் சொல்லி அனுப்பினான் என்று புரோகிதரைக் கேட்டார். அதற்கு புரோகிதர், ''ரங்கநாதன் அவர்களுக்கு ஞாபகசக்தி மிகவும் மோசம் என்று கூறினான். அவருக்கு உதவி செய்பவர் சிலர். அவரை கைநீட்டி அடிப்பவர் சிலர். எல்லோ ரையும் அவருக்கு ஞாபகத்தில் இருப்பதில்லை,'' என்று சாமர்த்திய மாக பதில் அளித்தார்.

''பொய், பொய்,'' என்று குதித்து எழுந்த ரங்கநாதன், ''எனக்கு ஞாபக சக்தி நன்றாகவே உள்ளது. என்னை அடித்தவன் பிரேமநாதன். தன்னு டைய பெண்ணின் திருமணத்திற்காக என்னிடம் பண உதவி கேட்டான். நான் மறுத்ததால் என்னை அடித்து விட்டான்,'' என்று கோபத்துடன் கத்தினார். ''எந்தப் பலனையும் எதிர் பார்க்காமல் பிரேமநாதன் இவரு டைய குடும்பத்தினருக்குப் பல உதவிகள் செய்திருக்கிறான். அவை எதுவும் இந்தப் பெரிய மனிதரின் நினைவில் இல்லை. 'உன்னை ஞாபகம் வைத்துக் கொள்ளுமாறு ஒரு பெரிய காரியம் செய்' என்று இவர்தான் அவனிடம் கூறினார். அதனால்தான் தான் செய்தது இவர் நினைவில் என்றும் இருக்குமாறு,



பிரேமநாதன் ஓர் அறை கொடுத்தான். ஆகவே அவன் பேரில் தவறில்லை'' என்று புரோகிதர் மீண்டும் சாமர்த்தி யமாக பதில் அளித்தார்.

நடந்தது என்னவென்று இப்போது கிராம அதிகாரிக்குப் புரிந்து விட்டது. ஆயினும், ''பிரேமநாதன் செய்தது தவறுதான். இதற்குரிய தண்டனை யை அவன் அனுபவித்துத்தான் ஆக வேண்டும்,'' என்றார். ''தலைவரே, பிரேமநாதன் இவருக்கு எவ்வளவோ உதவிகள் செய்துள்ளான். அதற்குரிய பலன் எதுவும் இவரிடமிருந்து அவனுக்குக் கிடைக்கவில்லை. பிரேமநாதனுக்கு அவன் செய்த உதவி களுக்கு கைம்மாறாக யார் திருப்பிச் செய்கிறார்களோ, அவர்களுக்கே அவனை தண்டிக்கவும் உரிமை உண்டு. இதுவே என் அபிப்பிராயம்,'' என்று புரோகிதர் கூறி நிறுத்தினார்.

புரோகிதர் கூறிய இறுதி வார்த்தை களைக் கேட்டு திடுக்கிட்ட கிராம அதிகாரி யோசனையில் ஆழ்ந்தார். பிறகு, ''நீங்கள் கூறுவது சரி. இந்த கிராமத்திலுள்ள அனைவருக்கும் பிரேமநாதனது நல்ல குணங்களைப் பற்றியும், அவன் பலருக்கும் செய்யும் உதவிகளும் தெரியும். அவ்வாறு உதவி பெற்றவர்களில் நானும் ஒருவன். நீங்கள் சொன்னபடி, அவனிடமிருந்து உதவிகள் பெற்றுக் கொண்ட யாருக்கும், அந்த நன்றியை அவனுக்குத் திரும்பச் செய்யும் வரை, அவனை தண்டிக்க உரிமை கிடை யாது. இது எனக்கும் பொருந்தும். ஆகவே அவனை என்னால் தண்டிக்க முடியாது. முதலில் நாம் எல்லோரும் சேர்ந்து அவனுக்கு உதவி செய்து நன்றிக்கடனைத் தீர்ப்போம்,'' என்று தீர்ப்பு வழங்கினார்.

இதைக்கேட்ட அனைவருக்கும் தாங்கள் அவனுக்கு உதவி செய்யா மல் இருந்து விட்டோமே என்ற குற்ற உணர்ச்சி உண்டாக, அனைவரும் உடனே அவனுக்கு அவனது மகளின் திருமணத்திற்காக பண உதவி செய்ய வாக்களித்தனர். அது மட்டுமல்ல, ''நாங்கள் இவ்வளவு பேர் உதவி செய்ய இருக்கும்போது, பிரேமநாதன் இந்தக் கருமி ரங்கநாதனிடமா போய் உதவி கேட்க வேண்டும்'' என்று ரங்கநாதன் முகத்திற்கு எதிரிலேயே அவரை இகழ்ந்து பேசலாயினர். ரங்கநாதனின் கண்கள் திறந்தன. தன் தவறை உணர்ந்து கொண்டார். பிரேம நாதன் அடித்தது தன்னையல்ல, தன்னை இதுகாறும் ஆட்டிப்படைத்த தன் சுயநலத்தை என்று உணர்ந்து கொண்டார். மனம் திருந்திய ரங்கநாதன் தானும் பிரேமநாதனுக்கு பண உதவி செய்யத் தயாரானார்.

கிராம அதிகாரி புரோகிதரை அழைத்து, ''ஐயா, நீங்கள் சொன்ன தெல்லாம் பிரேமநாதன் சொல்லிக் கொடுத்ததல்ல, நீங்களே கூறியிருக்கி றீர்கள் என்று தெரிகிறது. தகுந்த சமயத்தில் வந்து, மிக அழகாக நியாய மாகப் பேசி, என்னையும் நல்ல தீர்ப்பு வழங்க வைத்து விட்டீர்கள்,'' என்று புரோகிதரைப் பாராட்டினார்.





# மாய மந்திரவாதி

## 6

*(சந்திர சீல நாட்டின் மேல் போர் தொடுக்க முயற்சித்த மன்னன் துன்முகன் மீது மாய மந்திரவாதி மாய மந்திரக் கரடியை ஏவிவிட்டான். தப்பித்து ஓடிக் கொண்டிருந்த துன்முகனையும், அவன் மெய்க்காப்பாளனையும் காட்டில் நாகமல்லன் என்ற கொள்ளைக்காரன் பிடித்துக் கொண்டான். அதன் பிறகு...)*

**த**ன் மீது இரு கொள்ளைக்காரர்கள் பயங்கரமாகக் கத்திக் கொண்டே மரத்திலிருந்து தாவிக் குதித்ததும், பயந்து நடுங்கிய மெய்க்காப்பாளன், ''ஐயா, என்னை ஒன்றும் செய்து விடாதீர்கள், என்னை விட்டு விடுங்கள்'' என்று கெஞ்சினான். அவனது குதிரையின் லகானை ஒரு கையில் இழுத்துப் பிடித்துக் கொண்டு மற்றொரு கையினால்... நீண்ட கத்தியை வீசி மெய்க்காப்பாளனின் கழுத்தில் படுமாறுப் பிடித்து, ''இப்போது சொல். உன்னுடன் வந்தவன் அதோ அந்த மரக்கிளைகளில் சுருக்குக் கயிற்றில் தொங்குகிறான். நீங்கள் இருவர் மட்டும்தானா, இல்லை உங்களுடன் வேறு யாராவது இங்கே இருக்கிறார்களா? மறைக்காமல் உண்மையைச் சொல்'' என்றான்.

இதற்கு என்ன விடையளிக்கலாம் என்று மெய்க்காப்பாளன் யோசித்துக் கொண்டிருக்கும் போது, மரக்கிளைகளில் சுருக்குக் கயிற்றில் சிக்கி இருந்த துன்முகன், ''அடேய் மெய்க்காப்பாளா! நீ எங்கே தொலைந்து



போனாய்?'' என்று கத்த, உடனே நாகமல்லன், ''ஓ, நீ அவனுடைய மெய்க்காப்பாளனா! முதலில் குதிரையை விட்டு கீழேஇறங்கு, என்று நாகமல்லன் மெய்க்காப்பாள னை நோக்கிக் கூறினான். உடனே அவனும் குதிரையை விட்டுக் கீழே இறங்கினான். ''அடடே, நாம் இன்று நரி முகத்தில் விழித்திருக்கிறோம். சுருக்குக் கயிற்றை அவிழ்த்து, அந்த ஆளை கீழே இறக்கு,'' என்று நாகமல்லன் தன்னுடைய ஆட்களு க்கு உத்தரவிட்டான்.

துன்முகனை மற்றகொள்ளைக் காரர்கள் மரத்திலிருந்து கீழே இறக்கி னர். தன்னை விடுவித்துக் கொள்ள துன்முகன் பலவாறு முயன்றான். இதைக்கண்ட ஒருவன்துன்முகனைப் பார்த்து, ''எச்சரிக்கை. உன் உடலை இறுக்கும் கயிறு இப்போது உன் கழுத்தை இறுக்கும். சற்று சும்மா இரு'' என்று உறுமினான். துன் முகனை உற்றுப் பார்த்த நாகமல்லன், ''உன்னுடைய நடைஉடை பாவனை களைக் கண்டால், நீ பெரிய பணக்காரன் எனத் தோன்றுகிறது. என்ன நான் சொல்வது சரிதானே? மரியாதையாக உன்னிடம்உள்ள பணம், பொருள் எல்லாவற்றையும் கொடுத்துவிடு. பிறகு உன் ஆளை அனுப்பி, இன்னும் பத்தாயிரம் பொற்காசுகள் கொண்டு வரச் சொல்,'' என்று உத்தரவிட்டான்.

இதைக் கேட்ட துன்முகன், ''நான்தான் மன்னன் துன்முகன் என்று சொன்னால், பரிசுக்காக வேண்டி என்னைக் கொன்று என் தலையை சந்திரசீல மன்னனிடம் நாகமல்லன் கொடுத்து விடலாம். நான் ஒரு வியாபாரி என்று சொன்னால், அது பொய் என்று தெரிந்ததும் விபரீதம் ஏற்படலாம். இப்போது என்ன சொல்லலாம்?'' என்று யோசித்தான்.

அவன் தயங்குவதைக் கண்ட நாகமல்லன், ''என்ன யோசிக்கிறாய்? ஏதாவது பொய் சொல்லித் தப்பிக்க நினைக்கிறாயா?'' என்று கோபத் துடன் கேட்க, ''இல்லை, பத்தாயிரம் பொற்காசுகளுக்கு நான் எங்கே போவேன்? என யோசித்துக் கொண்டி ருந்தேன். என் பெயர் துர்ஜயன். நான் உதயகிரியில் வசிப்பவன். ஆனால் இப்போது என்னிடம் சல்லிக்காசு கூட இல்லை,'' என்றான் துன்முகன். ''இவ்வளவு விலைஉயர்ந்த உடை களை உடுத்திக் கொண்டு கூடவே ஒரு மெய்க்காப்பாளனையும் வைத்துக்

கொண்டு உன்னிடம் பணமே இல்லை என்று பொய்யா சொல் கிறாய்? உன்னை என்ன செய்கிறேன் பார்,'' என்று கூறிய நாகமல்லன், ''அடேய், இவன் கழுத்தில் சுருக்குக் கயிறு போடுங்கள். இவனை எந்த மரத்தில் தூக்கில் இடலாம் என்று பார்ப்போம்,'' எனத் தன் ஆட்களுக்கு உத்தரவிட்டான்.

இப்படி நாகமல்லன் சொல்லிக் கொண்டிருக்கும் வேளையில் தூரத்தில் யானை பிளிறும் சத்தமும், கரடி உறுமும் சத்தமும் கேட்டன. அந்த சத்தத்தைக் கேட்ட உடனேயே, துன்முகனும் அவனது ஆளும் குலை நடுங்கினார்கள். மெய்க்காப்பாளன் துன்முகனை நோக்கி, ''மன்னா, மாயக்கரடி வழி தவறி எங்கோ போய்விட்டது என நினைத்தேன். ஆனால் அது நாமிருக்கும் இடத்தை இப்போது கண்டு பிடித்து விட்டது என்று தோன்றுகிறது,'' என்று பயத்துடன் கூறினான்.

இந்த வார்த்தைகளைக் கேட்ட நாகமல்லன் தன் ஆட்களை நோக்கி, ''கேட்டீர்களா இவர்கள் பேசுவதை? ஒருவன் தன் பெயர் துர்ஜயன் என்கிறான். ஆனால் மற்றொருவன் என்னடாவென்றால் இவனை ''மன்னா'' என்று அழைக்கிறான். ஏதோ மாயக்கரடி காட்டில் வழி தவறி விட்டதாம். அது இவர்களை துரத்துகிறதாம் இவற்றில் எதை நம்புவது?'' என்று கேட்டுப் பிறகு துன்முகனை நோக்கி கத்தியை உருவியவாறே ''உண்மையைச்



சொல்லுங்கள். நீங்கள் யார்?'' என்று சீறினான்.

இப்போது என்ன பதில் சொல்வது என்று துன்முகன் யோசித்துக் கொண்டிருக்கையில், யானையின் பிளிறலும், கரடியின் உறுமலும் மீண்டும் கேட்டன. இந்த முறை நாக மல்லனே சற்று பயந்து விட்டான். தன் ஆட்களை நோக்கி ''உங்களில் ஒருவன் மரத்தின் மீது ஏறி ஏதாவது யானையும் கரடியும் வருகிறதா என்று பாருங்கள்.'' என உத்தரவிட்டான். உடனே நாகமல்லனின் ஆட்களில் ஒருவன் கிடுகிடுவென்று மரத்தில் ஏறிப் பார்த்தான்.

''தலைவா, இவர்கள் கூறுவது உண்மைதான். தும்பிக்கை அறுந்த யானை ஒன்றின் மேல், கையில் கோடாலியுடன் ஒரு கருங்கரடி பயங்கரமாக உறுமிக் கொண்டே இந்தப்பக்கம் வந்து கொண்டிருக்



கிறது அதைப் பார்க்கவே மிகவும் பயங்கரமாக இருக்கிறது'' என்று அறிவித்தான்.

இதைக் கேட்ட நாகமல்லன் ஒருகணம் கவலையில் ஆழ்ந்தான். துன்முகன் உடனே அவனது கையைப் பற்றிக் கொண்டு, ''மல்லா, பணத்திற்கு ஆசைப்பட்டு தாமதம் செய்யாதே. வேண்டுமானால் என் பணத்தைக் கொண்டு உனக்கு ஒரு நாட்டையே பரிசாக அளிக்கிறேன். இப்போது உடனே நாம் எல்லோரும் ஓடிப்போய் ஒளிந்து கொள்ளலாம், வா,'' என்று கெஞ்சினான். மெய்க் காப்பாளனும், ''மல்லா! தயங்காதே! ஓடிவிடலாம் வா. உனக்கு வேண்டுமானால் எங்கள் மன்னர் தனது ராஜ்ஜியத்தில் பாதியை உனக்குக் கொடுத்துவிடுவார். நான் முதலில் போய் சேனையை அழைத்து வருகிறேன். அதுவரை நீங்கள் ஒளிந்து கொள்ளுங்கள்,'' என்று சொல்லிக் கொண்டே குதிரையில் ஏறித் தப்பித்துக் கொள்ளத் தயாரானான். மெய்க் காப்பாளனது வார்த்தைகள் நாகமல்லனின் கோபத்தை மேலும் அதிகரித்தன. ''நீங்கள் இருவரும் முட்டாள்களா, என்ன? கரடி உங்களைத் துரத்துகிறது என்கிறீர்கள். இப்போது அதனிடமிருந்துத் தப்பி எங்கு செல்வீர்கள்?'' என்றான். பிறகு தன் ஆட்களை நோக்கி, ''இந்த இருவரையும் கயிற்றினால் பிணைத்து மலைக்குகையில் ஒளித்து வையுங்கள். கரடியிடமிருந்து தப்பித்த பிறகு, இவர்களை மீண்டும் முழுமையாக விசாரிக்கலாம்,'' என்றான்.

கொள்ளைக்காரர்கள் துன்முகனையும் அவனது ஆளையும் கயிற்றினால் பிணைத்து மலைக்குகைக்குள் இட்டுச் சென்றனர். அவர்கள் குகையின் அருகே செல்லும் போது, மாயக்கரடி அருகில் வந்து விட்டது. துன்முகனை நோக்கி அந்தக் கரடி, ''அடேய் துன்முகா! என்னிடமிருந்து தப்பித்து விடலாம் என்று நினைத்தாய் அல்லவா, இப்போ என்ன நடந்தது? இறுதியில் நீயே என்னிடம் சிக்கிக் கொண்டாய் பார்த்தாயா? உன்னை இந்தக் கோடாலிக்கு இரையாக்குகிறேன் பார்,'' என்றுக் கத்திக் கொண்டே யானையின் மீதிருந்து குதித்து துன்முகனை துரத்தியது. கரடியைக் கண்டு பயந்து போன அனைவரும் உடனே குகையினுள் நுழைந்து, குகை வாயிலை ஒரு பெரிய பாறை

கொண்டு மூடி விட்டனர். வாயிலை மூடியிருந்த பாறையை கரடி கோபத்துடன்கால்களால் உதைத்தது. பாறை நகராததால் இன்னும் கோபங் கொண்ட கரடி ''குகைக்குள் ஒளிந் திருப்பவர்களே வெளியில் வாருங் கள். எனக்கு துன்முகன் மட்டும்தான் தேவை. உங்களை நான் ஒன்றும் செய்ய மாட்டேன். வெளியே வாருங்கள்'' என்று ஆரவாரம் செய்தது.

இதைக் கேட்ட நாகமல்லன், ''இந்தக் கரடி துன்முகனை மட்டும் தான் பழி வாங்கத் துடிக்கிறது. என்ன தான் விஷயம்?'' என்று கேட்டு விட்டு துன்முகனை நோக்கி, ''காட்டி ற்கு அப்பால் உள்ள உதயகிரி நாட்டை துன்முகன் ஆள்கிறான் என்று கேள்விப்பட்டுள்ளேன். ஆனால் அவனை நான் இதுவரைப் பார்த்ததில்லை. அப்படியானால் நீதான் அந்த மன்னன் துன்முகனா?'' என்று கேட்டான்.

''அடடா, அந்தக்கரடி சொல்வதை நீ ஏன் நம்புகிறாய்? நான் துர்ஜயன், துன்முகன் இல்லை. நான் மட்டும் எப்படியாவது இங்கிருந்து உயிரோடு தப்பிக்க நீ உதவி செய்தால், உனக்குப் பத்தாயிரம் பொற்காசுகள் தந்து விடுகிறேன்,'' என்றான் துன்முகன். ''ஆமாம், ஆமாம். மன்னர் கொடுத்த வாக்கிலிருந்து ஒருபோதும் தவறு வதில்லை.'' என்று ஆமோதித்தான் மெய்க்காப்பாளன். இப்படி கொள்ளைக்காரர்கள் முன் தன்னை அடிக்கடி மன்னன் என்று காட்டிக்



கொடுப்பதைக் கண்டு சினமுற்ற துன்முகன், ''அடேய், முட்டாள் என்னை ஏன் மீண்டும் மீண்டும் மன்னா என்று அழைக்கிறாய்? உன்னைக் கொன்று விடுவேன், சற்று நேரம் உன் வாயை மூடிக் கொண்டு அமைதியாக இரு'' என்று மெய்க் காப்பாளனை நோக்கி சீறினான். நாகமல்லன், ''சந்தேகமேயில்லை. இது மன்னன் துன்முகன்தான். இப்போது இது நன்கு உறுதியாகி விட்டது,'' என்றான். உடனே துன் முகன், ''மல்லா! நீ தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறாய். இந்த காட்டுக் குள் அகப்பட்டுக் கொண்டதிலிருந்து என் ஆளுக்கு பைத்தியம் பிடித்து விட்டது. என்னைப் போய் மன்னன் என்று அதனால்தான் அழைக்கிறான் அவன் சொல்வதை நம்பாதீர்கள். உண்மையில் நான்துர்ஜயன். மன்னன் இல்லை,'' என்று மீண்டும் துன்

முகன் வலியுறுத்தினான். ''ஆமாம் ஆமாம், மன்னா! நீங்கள் சொல்லுவது தான் சரி,'' என்று மீண்டும் மெய்க் காப்பாளன் உளறிக் கொட்டினான்.

சற்றுநேரம் யோசித்தப்பின் நாகமல்லன், ''நீ துன்முகனா இல்லை துர்ஜயனா என்பது இப்போது முக்கியமில்லை. இப்போது குகை வாயிலை நாங்கள் திறக்காமல் போனால் அந்தக் கரடி தானே பாறையை நகர்த்தி விட்டு உள்ளே நுழைந்து நம் எல்லோரையும் கொன்று விடப் போகிறது,'' என்றான். மீண்டும் சற்று யோசித்தப்பின் நாகமல்லன், ''இறப்பது எப்படியும் நிச்சயம் என்று ஆகிவிட்டது. அதனால், நாமே பாறையை நகர்த்திவிட்டு, அந்தக் கரடியை ஒரு கை பார்த்து விடலாமா?'' என்று தன் ஆட்களிடம் கேட்டான்.

இதைக் கேட்ட மாத்திரத்தில் அஞ்சி நடுங்கிய மெய்க்காப்பாளன், ''மல்லா, அது சாதாரணக் கரடியல்ல. மந்திரவாதி உருவாக்கிய மாயக்கரடி. அதனை எதிர்த்து யாராலும் போரிட முடியாது. நாம் பத்திரமாக குகைக்குள்ளே இருப்போம்,'' என்றான். இப்படி அவன் சொல்லிக் கொண்டிருக்கும் போது, திடீரென ஒரு பெரிய சத்தம் கேட்டது. மாயக்கரடி குகை வாயிலை அடைத்திருந்த பாறையை உடைத்து விட்டு, ''அடேய் துன்முகா, வா வெளியே! உன் தலையை வெட்டி எடுத்துப் போகிறேன்,'' என்று பலமாக கத்தியது. ''கரடி நம்மை ஒன்றும் செய்யாது, துன்முகனைத் தான் பழி வாங்கத் துடிக்கிறது. அதனால் இவனை நாமே அந்தக் கரடியிடம் தள்ளிவிடலாம்,'' என்றான் நாகமல்லன்.

அப்போது ஆகாயமே கிடுகிடுக்க ஓர் உரத்த குரல் ''ஏன் இப்படி சத்தம் செய்கிறீர்கள்? பக்கத்து குகையில் பயங்கர அரக்கன் உக்கிரதண்டன் இருப்பது உங்களுக்குத் தெரியாதா?'' என்று கேட்க மாயக்கரடி துன்முகனை விட்டுவிட்டுத் திரும்பிப் பார்த்தது. ''நீதான் அந்த அரக்கன் உக்கிரதண்டனா! முதலில் உன்னைக் கொன்று விடுகிறேன்,'' என்று உரத்த குரலில் கத்தியது.

(தொடரும்)





நவீன வேதாளக் கதை

# நாக தேவதை

தன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மேல் ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லுகையில் அதனுள்இருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே, உன்னுடைய முயற்சி பாராட்டுக்குரியது. தனது லட்சியத்தை நிறைவேற்று வதற்காக உயிரையும் பொருட் படுத்தாத உன்னைப் போல் வெகு சிலரே இருப்பர். ஆனால் உன்னுடைய லட்சியம் நிறைவேறுமா என்று தெரியவில்லை. லட்சியத்தை நிறைவேற்றக் கூடிய வாய்ப்பு இருந்தும் நீ அதைத் தவற விடுவாய் என சந்தேகம்



பூஷணத்தின் மோசடியைப் பற்றி முறையிட்டான். இரு தரப்பினரையும் விசாரித்த பின் நீதிபதி தர்மராஜனை நோக்கி ''நீ உன்னுடைய நிலத்தை அடமானம் வைத்துக் கடன் வாங்கியிருப்பதாக இந்தப் பத்திரம் காட்டுகிறது. நீ மிகவும் நல்லவன் என்றும் பூஷணம் மோசக்காரன் என்றும் எனக்குத் தெரியும். ஆனால் அந்தப் பத்திரத்தை மீறி என்னால் எதுவும் செய்ய முடியாது. அது போலி என்பதை தீவிர விசாரணைக்குப் பிறகு ஆதாரங்களுடன் நிரூபிக்க வேண்டும். இதற்கு நீ ஓராயிரம் வராகனும், உனக்கு யாராவது ஜாமீனும் கொடுக்க வேண்டும்,'' என்றார்.

ஏற்படுகிறது. இப்படி தவறவிட்ட தர்மராஜன் என்பவனது கதையை இப்போது சொல்கிறேன், கவனமாகக் கேள்,'' என்றது.

ஓர் ஊரில் தர்மராஜன், விசுவநாதன் என்ற இரண்டு நெருங்கிய நண்பர்கள் இருந்தனர். அதே ஊரில் பூஷணம் என்னும் மோசடிக்காரனும் இருந்தான். போலிப்பத்திரங்கள் தயாரித்து ஊர் மக்களை ஏமாற்றி பணம் பறிப்பது அவனது வழக்கம்.

ஒருமுறை அவன் தர்மராஜன் தன்னிடம் நிலத்தை அடமானம் வைத்து மூவாயிரம் வராகன்கள் கடன் வாங்கியிருப்பதாக ஒரு போலிப் பத்திரம் தயாரித்து, உடனே வாங்கிய கடனை அடைக்காவிட்டால் தர்மராஜனது நிலம் தன்னுடமையாகும் என்று எச்சரிக்கை செய்து தர்மராஜனுக்குத் தகவல் அனுப்பினான். தர்மராஜன் நீதிபதியிடம் சென்று

தர்மராஜனிடம் நீதிபதி கேட்டத் தொகை இல்லை. உடனே கிராமத்தில் தன் நண்பர்களிடம் உதவி கேட்ட போது, அனைவரும் கை விரித்து விட்டனர். அதனால் தர்மராஜன் தன் உயிர் நண்பனான விசுவநாதனிடம் உதவி கேட்டான். ஆனால் விசுவநாதன் அப்போது பணமுடையில் இருந்தான். அவனுடைய தந்தை நோய் வாய்ப்பட்டு இருந்ததால், அவரது சிகிச்சைக்குப் பணம் தேவைப்பட்டது. தவிர அவனது தங்கைக்குத் திருமணம் நிச்சயமாயிருந்ததால், அதற்கு வேறு ஏராளமான பணம் தேவைப்பட்டது. சாதாரண சமயமாகஇருந்தால் விசுவநாதன் உதவி செய்திருப்பான். இந்த சமயத்தில் பூஷணம் விசுவநாதனை அணுகி அவனுக்கு தான் கடன் உதவி செய்வதாகவும், தர்மராஜன் விஷயத்தில் தன்னுடன் ஒத்துழைக்கவும்

கேட்டுக் கொண்டான். நட்பைவிடத் தன்னுடைய பண நெருக்கடியை மிக முக்கியமாக நினைத்து, விசுவ நாதனும் தர்மராஜனிடம் தன்னால் பணம் தர இயலாதென்று கூறி விட்டான். எங்குமே பணம் திரட்ட இயலாத தர்மராஜனுடைய நிலம் பூஷணத்துக்கு சொந்தமாகி விட்டது.

இந்த அக்கிரமத்தைக் கண்டு தர்மராஜனுக்கு பூஷணத்தைவிட, தக்க சமயத்தில் உதவ மறுத்தத் தன் நண்பன் மீதுதான் ஆத்திரம் வந்தது. முதலில் கண்மண் தெரியாமல் தனக்கு வந்த கோபத்தில், தன் நண் பனைக் கொன்று விடலாமா என்றே நினைத்தான். ஆனால் இப்படிச் செய்தால் தான் தூக்கில் தொங்க நேரிடும் என்பதால், தன்னைக் கட்டுப் படுத்திக் கொண்டான்.

ஆனால் என்னதான் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாலும், அவன் மனம் எப்போதும் விசுவ நாதனைப் பழிவாங்கத் துடித்துக் கொண்டேயிருந்தது. ஒருநாள் தர்மராஜனுக்கு ஊர் எல்லையிலிருந்த ஒரு சித்தரின் ஞாபகம் வந்தது. சித்தரை அணுகி தன்னுடைய நண்பனின் துரோகத்தைப் பற்றி விவரித்து, தான் அவனை எப்படி யாவது பழி வாங்கத் துடிப்பதாகவும், அதை எப்படிச் செய்வது என்றும் அவரிடம் ஆலோசனை கேட்டான்.

''தம்பி, உனது மனநிலை புரி கிறது. எப்போது ஆபத்தில் உனக்கு உதவி செய்யவில்லையோ, அவன் உனது உண்மையான நண்பன் இல் லை. ஆனால் நீ அவனுக்குத் தீங்கு விளைவிக்க நினைப்பதால், நீயும்



அவனது உண்மையான நண்பன் இல்லை,'' என்றார். ''சுவாமிகளே, நான் வேண்டுமென்றே தீங்கு செய்யப் போவதில்லை. அவன் எனக்கிழைத்த துரோகத்துக்கு கூலி கொடுக்க விரும்புகிறேன்,'' என்றான் தர்மராஜன். ''பழி வாங்கும் எண்ணத்தை விட்டுவிட்டு, வேறு ஏதாவது உதவி கேள், செய்கிறேன்,'' என்றார் சித்தர். ''சுவாமி, என் மன திலிருந்து பழி வாங்கும் உணர்ச்சி யையாவது அகற்றி விடுங்கள்,'' என்று கூறினான் தர்மராஜன்.

சற்று யோசித்த பின் சித்தர், ''உன்னை நான் ஒரு விஷப் பாம்பாக மாற்றி விடுகிறேன். உன்னுடைய பழி வாங்கும் எண்ணம் விஷமாக உன்னுள் இருக்கும். அந்த விஷத்தை நீ பயன்படுத்தி வெளியே கக்கி விட்டால், உனது விஷமும் அகன்று விடும். அத்துடன் பழி வாங்கும்



எண்ணமும் மறைந்து விடும். நீ பழைய படி தர்மராஜனாக மாறி விடுவாய். நீ பாம்பாக இருக்கும் போது, உன்னை யாராவது அடித்துக் கொன்று விட்டால், அத்துடன் நீயும் இறந்து விடுவாய் சம்மதமா?'' என்று கேட்க, உடனே முன்பின் யோசிக் காமல் தர்மராஜன் சரியென்று சொல்லி விட்டான். சித்தரும் தர்ம ராஜனைப் பாம்பாக மாற்றி விட்டார்.

பாம்பாக மாறிய தர்மராஜன் வயல்கள் இருக்கும் பக்கம் சென் றான். அங்கு ஒரு விவசாயி ஒரு கம்பினால் குப்பைகளைத் தள்ளிக் கொண்டிருந்தான். அந்தக் கம்பு பாம்பின் வாலில் பட்டுவிட்டது. வலி பொறுக்காத தர்மராஜன் சீறியெழுந்து விவசாயியைத் தீண்ட முயல்வதற் குள், விவசாயி வெகுதூரம் நகர்ந்து சென்று விட்டான். தர்மராஜனைப் பார்த்துக் கொண்டிருந்த மற்றொரு பாம்பு ''எங்கே நீ அவனைத் துரத்திக் கொண்டே போவாயோ என்று பயந்தேன்! அவன் அந்தக் கம்பினால் உன்னை அடித்துக் கொன்றிருப்பான். நமது விஷத்தை தற்காப்புக்காக மட்டுமே பயன்படுத்த வேண்டும். அவனது கம்பு தெரியாமல் உன் மீது பட்டு விட்டதற்காக, அவனைப் போய் பழி வாங்க நினைப்பது அறிவீனம்,'' என்றது.

''ஓகோ, மனிதர்களைப் போல் பழிவாங்கும் குணம் பாம்புகளுக்குக் கிடையாதா!'' என நினைத்துக் கொண்ட தர்மராஜன் யார் கண்ணிலும் படாமல் விசுவநாதன் வீட்டுக்கு ஊர்ந்து சென்றான்.

தன் நண்பன் வீட்டுக்குள் நுழைந் ததும், விசுவநாதனின் ஆறு வயதுச் சிறுவனைக் கண்டான். இந்தச் சிறு வனைத் தீண்டி விடலாமா என்று ஒருகணம் தர்மராஜன் எண்ணினான். ''சேச்சே, இந்தக் கள்ளம் கபடமற்ற குழந்தையைப் போய் ஏன் கடிக்க வேண்டும்! நமது எதிரி விசுவநாதன் தான்,'' என்று ஊர்ந்து கொண்டே விசுவநாதனைத் தேடி பூஜை அறைக்குள் நுழைந்து விட்டான். இதற்குள் அந்தச்சிறுவன் பாம் பினைக்கண்டு, ''பாம்பு பாம்பு'' என்று கத்த, எல்லோரும் அந்தச் சிறுவனுடன் பாம்பு சென்ற இடமான பூஜைஅறைக்குள் நுழைந் தனர். தர்மராஜன் பாம்பு உருவத்தில் படமெடுத்து நிற்கக் கண்டனர்.

''நாகதேவதை நம் வீட்டுப் பூஜையறைக்கு வந்திருக்கிறாள். எல்லோரும் அவளை வணங்குங்கள். அவள் நமக்குத் தீங்கு எதுவும் செய்ய

மாட்டாள். நமது நல்ல நண்பர் தர்மராஜன் ஒரு மோசடிக்காரனால் ஏமாற்றப்பட்டு மிகவும் கஷ்டப் படுகிறார். அவர் கஷ்டம் தீர வேண்டி அவருக்காக நாக தேவதையைப் பிரார்த்தனை செய்யுங்கள்.'' என்று விசுவநாதனின் தாய் பக்தி பரவசத் துடன் சொல்ல, எல்லோரும் நாகதேவதையை விழுந்து வணங்கி னர். கண்களை மூடிக்கொண்டு அனைவரும் பிரார்த்தனை செய்தனர்.

கண்ணை மூடிப் பிரார்த்தனை செய்யும் விசுவநாதன் தன் அருகில் இருந்தும் தர்மராஜனுக்கு அவனைப் பழி வாங்கத் தோன்றவில்லை. திடீரெனப் பழி வாங்கும் எண்ணமே மறைந்து விட்டது. தரையில் பலமாக ஒருமுறை கொத்தியவுடன், பாம்பின் விஷம் வெளியில் வந்துவிட, தர்ம ராஜன் தன் சுய உருவத்தை அடைந் தான். எல்லோரும் இன்னும் கண் களை மூடிப் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கையில், தர்மராஜன் எழுந்து வந்து அவர்களோடு சேர்ந்து நின்று கொண்டான்.

விசுவநாதனின் தாய் கண் திறந்து பார்த்தபோது நாகதேவதை மாயமாக மறைந்திருந்தது. அதை அவள் அனை வருக்கும் தெரியப் படுத்த, அனை வரும் கண்களைத் திறந்தனர். அவர்கள் அருகில் தர்மராஜன் நின்று கொண்டிருந்ததைப் பார்த்ததும் அவர்கள் அடைந்த ஆச்சரியத்திற்கு அளவே இல்லை. விசுவநாதன் மட்டும் குற்ற உணர்ச்சியுடன் தலையைக் குனிந்து கொண்டான். பழிவாங்கும் உணர்ச்சியை அறவே கைவிட்ட தர்மராஜன் அன்புடன்,



''நண்பா, நீ உதவ முடியாத சூழ்நிலையில் இருந்ததால், உன் மீது எனக்கு வருத்தம் இல்லை. என் நிலம் போனால் போகட்டும். அதற்காக என் நண்பனை நான் இழக்க மாட்டேன்'' என்றான். உணர்ச்சி வசப்பட்ட விசுவநாதன் தன் நண்பனை ஆரத் தழுவிக் கொண்டான்.

அது மட்டுமல்லாது பூஷணத்தின் மனதை மாற்றி, தர்மராஜனுக்கு அவனுடைய நிலத்தையும் மீட்டுக் கொடுத்தான்.

கதையைக் கூறிய வேதாளம் விக்கிரமனிடம், ''மன்னா, தனக்கு தக்க சமயத்தில் உதவாமல் ஏமாற்றிய விசுவநாதனைப் பழிவாங்க அருமையான வாய்ப்பு கிடைத்தும் அதை தர்மராஜன் ஏன் பயன்படுத்தவில்லை? இதற்கு சரியான விடை தெரிந்திருந்தும் நீ சொல்லாமல் இருந்தால், உன் தலை வெடித்து சுக்கு நூறாகிவிடும்,'' என்றது.

அதற்கு விக்கிரமன், ''மனித உருவத்தில் விசுவநாதனைப் பழி வாங்கினால், அதற்கான தண்டனை அனுபவிக்க வேண்டும் என்ற அச்சத்தில் இருந்த தர்மராஜன், சித்தர் பாம்பாக மாற்றுவதாகச் சொன்ன உடன் பாம்பாயிருந்தால் பழி வாங்கும் எண்ணம் நீடித்திருக்கும் என்றும், விசுவநாதனைக் கொன்றாலும் பாம்பை யாரும் நீதி விசாரணை செய்து தண்டிக்க முடியாது என்றும் உடனே பாம்பாக மாற ஒப்புக் கொண்டான். ஆனால் விசுவநாதனைக் கொல்ல வாய்ப்பு கிடைத்த போது, அவனது தாய் கூறிய வார்த்தைகளினால் தர்மராஜனின் பழி வாங்கும் எண்ணம் மறைந்துவிட்டது.

விசுவநாதனுக்கு தனக்கு உதவ முடியாத சூழ்நிலை இருந்தது என்றும் தனக்கு வேண்டுமென்றே துரோகம் செய்யவில்லை என்றும், தெரிந்து கொண்ட பிறகு, முக்கியமாக தனது நன்மைக்காக அந்தக் குடும்பமே பிரார்த்தனை செய்வதையும் கண்ட பிறகு, பழைய பழி வாங்கும் எண்ணம் மறைந்து, அன்பும் நேசமும் தர்மராஜன் மனதில் உண்டாயின,'' என்று பதிலளித்தான்.

விக்கிரமனது பதிலினால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக்கொண்டது.






# காட்டுத்தீ போல் தோன்றும் மலர்கள்



விந்திய மலைச் சாரலில் 'குட்டு முருக்கு' என்ற மரங்கள் காணப்படுகின்றன. இவை வசந்த காலத்தில் பிரகாசமான ஆரஞ்சு நிறத்தில் பூக்கின்றன. அடர்ந்த மரங்களுக்கு இடையில் ஒரே சமயத்தில் ஆயிரக்கணக்கான பூக்களைக் காணும்போது, திடீரென ஏதோ தீப்பிடித்து எரிவது போன்ற பிரமையை ஏற்படுத்துகின்றன. இராமபிரான் கூட இந்தப் பூக்கள் கூட்டத்தைக் கண்டு காட்டுத்தீயோ என பிரமித்துப் போனாராம், என்று இராமாயணத்தில் குறிப்பிடப் படுகிறது. ஆகவே இந்தப் பூக்களுக்கு காட்டுத் தீப்பூக்கள் என்ற பெயரும் உண்டு. இந்த மலர்களைப் பற்றி வேதத்தில் கூட குறிப்பிடப்பட்டுள்ளது.

# மிகப் பெரிய குடியிருப்பிடம்

1859ஆம் ஆண்டு ராவ் ஜோதா என்பவரால் உருவாக்கப்பட்ட ஜோத்பூர் 'நீல நகரம்' என்று அழைக்கப்படுகிறது.

வெளியில் படும் சூரிய வெப்பத்தைப் பிரதிபலித்து வீட்டின் உட்புறம் குளிர்ச்சி யாக இருப்பதற்காக, இங்குள்ள பெரும்பாலான வீடுகள் நீலநிறத்தில் வண்ணம் பூசப்பட்டுள்ளதால், 'நீல நகரம்' என்று பெயர் வந்தது. இந்த உள்ள நகரத்தில் 'உமெய்த்பவன்' எனும் கட்டடம் உலகிலேயே மிகப் பெரிய குடிஇருப்பிடமாகக் கருதப்படுகிறது. இந்தக் கட்டடம் 26 ஏக்கர் நிலப் பரப்பில் 15 தோட்டங்களும் 347 விசாலமான அறைகளும் கொண்டது.



இந்தியப் புராதனக் கதைகள் - 25

# இளவரசனின் பெருந்தன்மை

சுவர்ணபுரியை ஆண்டு வந்த மன்னன் சகாதேவன் வீரத்தில் சிறந்தவன். அண்டை நாடான விராடபுரி மன்னனுடன் நீண்ட நாட்களாகவே சகாதேவனுக்கு விரோதம் இருந்து வந்தது. விராடபுரி மன்னனைப் போரில் வெற்றி கண்டு, அந்த நாட்டை தன் ராஜ்ஜியத்துடன் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பது சகாதேவனுடைய நீண்ட நாளைய கனவாக இருந்தது. சமீப காலமாக அண்டை நாட்டு அரசன் நோய் வாய்ப்பட்டுள்ளான் என்ற செய்தியை ஒற்றர்கள் மூலம் தெரிந்து கொண்ட சகாதேவன், விராடபுரியின் மீது போர் தொடுக்க இதுதான் சரியான சமயம் என்று எண்ணினான்.

ஆனால் சகாதேவனுடைய இந்த விருப்பத்திற்கு அவனதுமனைவியும், அமைச்சரும் குறுக்கீடாக இருந்தனர். ''மன்னா, அவர்களால் நமக்கு இப்போது எதுவும் ஆபத்தில்லை. தவிர விராடபுரி அரசன் நம்முடன் இப்போது பகைமை பாராட்டுவதில்லை. இந்த அமைதியான சூழ்நிலையில், நாம் ஏன் அவர்களுடன் நட்புறவு கொள்ளக் கூடாது?'' என்று பட்டத்து ராணி கேட்டாள். ''அரசியார் சொல்வது முற்றிலும் சரி,'' என்று ஆமோதித்த அமைச்சர், ''அவர்களுடன் நமக்கு முன்பு ஒரு காலத்தில் விரோதம் இருந்தது. இப்போது இல்லை. தவிர விராடபுரி அரசனையும் அவனது இளம் புதல்வனையும் அந்நாட்டு மக்கள் மிகவும் நேசிக்கின்றனர். இந்த சந்தர்ப்பத்தில் நாம் போர் தொடுத்தால், அமைதியை குலைப்பதோடு அந்த



நாட்டு மக்களின் விரோதத்தையும் சந்திக்க நேரிடும்,'' என்றார்.

அவர்களது அறிவுரையை ஏற்க மறுத்த சகாதேவன் ''சரிதான்! இப்போதுள்ள மன்னன் நோய் வாய்ப்பட்டு செயலற்றவனாக உள்ளான். ஆனால் எதிர்காலத்தில் அவனது மகன் பெரியவன் ஆனதும் நம்முடன் போர் தொடுக்க மாட்டான் என்பது என்ன நிச்சயம்? தவிர இப்போது நாம் இந்த சந்தர்ப்பத்தில் போர் தொடுத்தால், எளிதில் வெற்றி அடையலாம். அவர்கள் நாடு நம்முடையதாகி விடும்,'' என்று பிடிவாதமாகக் கூறினான்.

இறுதியில் சகாதேவன் விருப்பப்படியே, சுவர்ணபுரியின் படை விராடபுரியில் நுழைந்து முற்றுகையிட்டு போரிட்டது. இந்தச் செயலை சற்றும் எதிர்பார்க்காத விராடபுரி மன்னன் உடல் நிலை சரியில்லாத போதும் தானே போர்க்களத்தில் முன் நின்று போரிட்டான். ஆனாலும் சுவர்ணபுரியின் தாக்குதலில் விராடபுரி படைகள் தோல்வியுற்றன. விராடபுரி மன்னன் வீர சுவர்க்கம் அடைந்தான். சகாதேவன் வெற்றியடைந்தாலும் போரில் பலத்த காயமடைந்து நாளுக்கு நாள் மோசமாகி அவனும் உயிர் துறந்தான். எப்படியோ விராடபுரி சுவர்ணபுரியின் ஆதிக்கத்தின் கீழ் வந்து விட்டது.

ஆண்டுகள் பல உருண்டோடின. சகாதேவன் மகள் வளர்ந்து பெரியவள் ஆனாள். அவளுக்குப் பொருத்தமான மணமகனைத் தேடி சுவர்ணபுரியின் அமைச்சர் தன் ஆட்களுடன் நாட்டின் பல பாகங்களுக்கும் சென்றார். ஒரு நாள் காட்டில் உள்ள குருகுலத்தில் பயிலும்



மாணவர்களில் இளவரசிக்குத் தகுதியான மணமகன் கிடைப்பானா என்று அறிய அமைச்சர் தன் ஆட்களுடன் மாறுவேடத்தில் அங்கு சென்றார். அங்குள்ள மாணவர்களில் ஒருவன் பார்க்க மிக கண்ணியமாகவும், அழகாகவும் இருந்ததுடன் மற்றவர்களுக்குத் தலைவன் போல் நடந்து கொண்டான். அவர்கள் கூட்டமாக அமர்ந்திருக்கையில், எங்கிருந்தோ வந்த கல் ஒன்று அந்த அழகான மாணவனின் தலையில் பட்டு விட்டது. சுற்றியிருந்தவர்கள் அனைவரும் பரபரப்படைந்தனர். சிலர் அவனுக்குத் தலையில் காயத்திற்குக் கட்டுப்போட மற்றவர்கள் கல்லெறிந்தது யார் என்று தேடினார்கள். புதருக்கு அப்பால் நின்று கொண்டிருந்த ஒரு சிறுவனே அவ்வாறு கல் எறிந்தவன் என்று கண்டு பிடித்து அவனை மற்ற மாணவர்கள் பிடித்து இழுத்து வந்தனர்.

காயமடைந்த மாணவர் தலைவன்

முன்பாக அவனை நிறுத்தி அவனை மற்றவர்கள் தாக்க முற்பட்ட போது மாணவர் தலைவன் அவர்களைத் தடுத்து, ''ஏன் நீ இவ்வாறு கல் எறிந்தாய்?'' எனக் கேட்டான். அதற்கு அந்தச் சிறுவன், ''நான் மிகவும் பசியாயிருந்தேன். அந்தக் கொய்யா மரத்திலுள்ள பழங்களை உண்ணலாம் என்று எண்ணி அந்த மரத்தின் மீது நான் கல் வீசினேன். பழமும் விழுந்தது. ஆனால் கீழே விழுந்த கல் தவறுதலாக உங்கள் மீது பட்டுவிட்டது,'' என்று மன்னிப்புக் கோரினான். ''இப்போது உன் பசி தீர்ந்ததா?'' என்று தலைவன் கேட்க. ''ஓரளவு தீர்ந்தது. இப்போது என்னால் ஓரளவு நடந்து செல்ல முடியும் ஆனால் இந்தக் கொய்யாப் பழம் மட்டும் சாப்பிடாமலிருந்தால், நான் பசியால் மயக்கம் அடைந்திருப் பேன்,'' என்றான் அந்தச்சிறுவன். ''அப்படியா, நீ இப்போது எங்கும் செல்ல வேண்டாம். எங்கள் ஆசிரமத் தில் வயிராற உண்டு ஓய்வு எடுத்துக் கொள். நாளைக் காலை நீ போகலாம்,'' என்றான் தலைவன்.

கூடியிருந்த மாணவர்கள் தலை வனது சொற்களைக் கேட்டு வியப் படைந்தனர். ''நீ என்ன சொல்கிறாய்? அவன் உன்னைக் கல்லால் அடித் திருக்கிறான். அவனுக்கு ஏன் இரக்கம் காட்டுகிறாய்?'' என்றார்கள். அதற்கு மாணவர் தலைவன் புன்முறுவலுடன், ''நண்பர்களே! இந்தச் சிறுவன் கொய்யா மரத்தினை கல்லால் அடித்தான். அதற்கு அந்த மரம் அவன் பசியாறப் பழம் தரவில்லையா? ஒரு மரம் இவ்வாறு உதவி செய்யும் என்றால், மனிதர்க ளாகிய நாம் இவனுக்கு உதவி செய்ய வேண்டாமா? தவிர, இவன் வேண்டு மென்றா என்மீது கல் வீசினான்? தன் மீது கல் பட்டும், மரம் அவனுக்குப் பழம் தந்தது எனில், நான் அவனுக்கு முழு உணவே தந்து இரக்கம் காட்ட வேண்டும்,'' என்று பதில் அளித்தான். இந்தச் சொற்கள் மற்ற மாணவர்களுக்கு மட்டும் அல்ல, அமைச்சருக்கே பெரும் வியப்பை அளித்தது. உடனே விரைந்து அந்த மாணவன் யார் என்று அமைச்சர் விசாரிக்க, அவன் வேறு யாருமில்லை, விராடபுரி இளவரசன் என்று தெரிந்தது. தங்கள் இளவரசிக்குத் தகுந்த மணமகன் கிடைத்த மகிழ்ச்சியில் அமைச்சர் சுவர்ணபுரி அரசிக்கு இதைத் தெரிவிக்க, விரைவிலேயே, சுவர்ணபுரி இளவரசி க்கும் விராடபுரி இளவரசனுக்கும் திருமணம் நிகழ்ந்தது. அதுமட்டுமல்ல, அந்த இருநாடுகளுக்கும் அரசனாக இளவரசன் முடிசூட்டிக் கொண்டான்.



# தலைக்கு வந்தது....




**வா**ழ்க்கையில் நடக்கும் சில உண்மையான நிகழ்ச்சிகள், கதைகளில் வருவதைவிட மிக அதிசயமாகவும் நம்ப முடியாததாகவும் இருக்கின்றன. அப்படித்தான் ஒரு நிகழ்ச்சி நடந்தது, வடஅமெரிக்காவில் நெப்ராஸ்கா மாநிலத்து பியாட்ரிஸ் என்ற நகரத்தில். அந்த நகரத்தில் இருந்த ஒரு தேவாலயத்தில் ஓர் இசைக்குழு தினமும் மாலை நேரங்களில் பக்திப் பாடல்களைப் பயிற்சி செய்வதுண்டு. அந்தக் குழுவிலிருந்த அனைவரும் நேரம் தவறாமைக்குப் பெயர் பெற்றவர்கள். அப்படி இருந்தும் அவர்கள் அனைவரும் ஒருநாள் மிகவும் தாமதமாகப் பயிற்சிக்குப் புறப்பட்டனர். அன்று மட்டும் அவர்கள் குறித்த நேரத்தில் சென்றிருந்தால் விபரீதம் நடந்திருக்கும்.

1950ம் ஆண்டு, மார்ச் 1ஆம் தேதி அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. தேவாலயத்தைச் சேர்ந்த வால்டர் லெம்பல் இசைப் பயிற்சி தொடங்குவதற்கு முன்பாகவே வந்து, வேண்டிய ஏற்பாடுகளை செய்து விட்டு குளிர் காய்வதற்காக தீயும் மூட்டி விட்டு தனது வீட்டுக்குச் சென்று விட்டார். ஒவ்வொரு நாளும் மாலை 7.15க்கு இசைப் பயிற்சி குறித்த நேரத்தில் சரியாகத் தொடங்கி விடும். வால்டர் லெம்பல் சரியாக 7.15க்கு தேவாலயம் திரும்பிச் செல்லத் தயாராயிருந்தார். ஆனால் அவரது மனைவி தனது உடைகளுக்கு இஸ்திரி போட்டு முடிக்காததால் அவரால் குறித்த நேரத்தில் தேவாலயம் செல்ல



ஆய மிவிமி



அவள் மட்டும் குறித்த நேரத்தில் சென்றிருந்தால்....!

லாடோனா வாண்டே கிரிஃப்ட் என்ற சிறுமி தனது கணிதப் பாடத்தை முடித்து விட்டு சற்று நேரங்கழித்தே போகத் தீர்மானித்தாள். அது எவ்வளவு நல்லதாயிற்று தெரியுமா!

சாடி, ராயனா என்ற இரு பெண் மணிகள் வழக்கப்படி குறித்த நேரத்தில் பயிற்சிக்காக கிளம்பியும், கார் பழுதாகி விட்டதால் அவர்கள் லாடோனாவை அவளுடைய காரில் கூட்டிச் செல்லுமாறு வேண்டினர். ஆனால் கணிதப் பாடத்தில் மூழ்கிய லாடோனா தாமதம் செய்ததால், இந்த இரண்டு பெண்மணிகளுக்கும் புறப் பட மிகவும் நேரமாகி விட்டது. கார் மட்டும் பழுதாகாமல் குறித்த நேரத்தில் அவர்கள் சென்றிருந் தால்....!

லூசில் ஜோன்ஸ், டோரதி வுட் என்ற இரு தோழிகளும் அந்த இசைக் குழுவைச் சேர்ந்தவர்கள். தினமும் இருவரும் சேர்ந்தே செல்வது வழக்கம். லூசில் அன்று ஏதோ

முடியவில்லை. இசைக் குழுவைச் சேர்ந்த ஹார்வி ஆல், தனது நண்பனுடன் மிகவும் சுவாரஸ்ய மாகப் பேசிக் கொண்டிருந்ததில் நேரம் சென்றதையே கவனிக்க வில்லை. அவர் மட்டும் சரியான நேரத்தில் சென்றிருந்தால்......!

மேரிலின் பால் என்ற பியானோ வாசிக்கும் பெண்மணி அன்று பார்த்து ஏதோ தூங்கியே போய் விட்டார். அவருடைய அம்மா அவரை எழுப்பிய போது மணி ஏழே காலைத் தாண்டி விட்டது. தன் பெண் தூங்கிப் போனதால் இயக்குனரான தாய்க்கும் குறித்த நேரத்தில் பயிற்சி க்குச் செல்ல முடியவில்லை. அவர் கள் மட்டும் சென்றிருந்தால்....!

அன்று மிகவும் குளிர்காற்று வீசியதால், ஜாய்ஸ்பிளாக் என்ற இசைக்குழுவைச் சேர்ந்த பெண்மணிக்கு வீட்டை விட்டுக் கிளம்பவே மனம் இல்லை. கடைசியில் ஒரு வழியாக எழுந்து புறப்படத் தயாரான போது, மணி ஏழே காலைத் தாண்டி வெகு நேரமாகி விட்டது.



சுவாரஸ்யமாக வானொலி நிகழ்ச்சி ஒன்றைக் கேட்டுக் கொண்டிருந்த தால், அவளுக்குப் பயிற்சிக்குச் செல்ல நேரமாகி விட்டது. இப்படி அவர்கள் இருவரும் தாமதம் செய் திருக்காவிட்டால், அவர்களுக்கு என்ன நடந்திருக்கும் தெரியுமா! திருமதி லியோனார்ட் சூஸ்டர் அவரது மகள் ஆகிய இருவரும் குறித்த நேரத்தில் பயிற்சிக்குக் கிளம்பி விட்டனர். ஆனால் செல்லும் வழியில், திருமதி லியோனார்ட் தன் தாய் வீட்டுக்குச் சென்றதால் தாமதமாகி விட்டது. அப்படி தாமதமானது எவ்வளவு நல்ல தாய் போயிற்றுத் தெரியுமா?

ஹெர்பர்ட் என்னும் இசைக்குழுவைச் சேர்ந்த தொழிலாளி அன்று ஏதோ கடிதம் எழுதிக் கொண்டி ருந்ததில் அவருக்குப் புறப்பட நேரமாகி விட்டது. அவர் மட்டும் குறித்த நேரத்தில் சென்றிருந்தால் என்ன நடந் திருக்கும் தெரியுமா?

இவ்வாறு இசைக்குழுவைச் சேர்ந்த ஒவ்வொருவருக்கும் ஏதோ ஒரு காரணத்தினால் அன்று பயிற்சி க்குச் செல்ல தாமதமாகி விட்டது. அவர்கள் அனைவரும் சரியான நேரத்தில் தேவாலயத்துக்கு இசைப் பயிற்சிக்காக சென்றிருந்தால், அவர் களை மரணம் தழுவியிருக்கும்.

ஆம், சரியாக 7.25க்கு தேவால யத்தில் ஒரு பயங்கரமான வெடிச் சத்தம் கேட்க, சற்று நேரத்தில் தேவாலயம் முழுதும் இடிந்து விழுந்தது. இசைப் பயிற்சி அந்த சமயம் நடந்து கொண்டிருந்தால், ஒருவர் கூட உயிர் பிழைத்திருக்க முடியாது. நேரம் தவறாமல் தேவாலயத்திற்கு சரியான நேரத்துக்கு தினமும் வரும் அனைவரும் அன்று மட்டும் ஏதேதோ அற்ப விஷயங் களுக்காக சொல்லி வைத்தாற்போல் தாமதமாகப் புறப்பட்டுள்ளனர். இது தற்செயலாக நடந்ததா? விதியின் விளையாட்டா? கடவுளின் கருணை



யா? ஆனால் தெய்வாதீனமாக உயிர் பிழைத்த அனைவரும் இது கடவு ளின் கருணை என்றே உறுதியாக நம்பினார்கள்.

தேவாலயத்தில் எரிவாயு கசியத் தொடங்கியதாகவும், ஏற்கனவே குளிர்காய்வதற்காக மூட்டி இருந்த தீயுடன் சேர்ந்து அந்த பயங்கர விபத்து ஏற்பட்டதாகவும் சிலர் கருதினர். என்னவோ, தலைக்கு வந்தது தலைப் பாகையோடு போயிற்று.

## நாகாலாந்து நாட்டுப்புறக் கதை

# நாகர்கள் பகார் மரத்தை வெட்டுவதில்லை

**பா**ரதத்தின் வடகிழக்குப் பகுதியிலுள்ள நாகர்கள் பகார் மரத்தை மட்டும் வெட்டுவதில்லை. பகார் என்பது அடர்ந்த கிளைகளைக் கொண்ட ஆலமரத்தைப் போல் தோற்றமளிக்கும் ஒரு மரமாகும். இதையொட்டி ஒரு சுவாரஸ்யமான கதை உள்ளது.

ஒருமுறை நாகர் இனத்தைச் சேர்ந்த ஒரு வாலிபன் அடர்ந்த காட்டு வழியே சென்று கொண்டிருந்தான். அந்தக்காடு பெரிய மலைகளாலும், அடர்ந்து வளர்ந்த பெரிய மரங்களாலும் சூழப்பட்டிருந்தது. அந்தக் காட்டில் இரவு நேரத்தில் கொடிய பேய், பிசாசுகள் நடமாடுவது உண்டு. இந்தப் பேய்கள் மனிதனை முன்புறம் இருந்து தாக்குவதில்லை என்றும், பின்புறமாக வந்து அழுத்திப் பிடித்து கொன்று உண்டுவிடும் என்றும் கேள்விப்பட்டிருந்தான். சிறிது நேரத்தில் மாலை மங்கி, இரவு மெதுவாகப் பரவத் தொடங்கியது.



அந்தச் சமயம் திடீரென ஒரு சிறிய பேய் அவனைத் தாக்க முயற்சி செய்தது. ஆனால் சரியான நேரத்தில் அதைப் பார்த்துவிட்டதால், அந்த இளைஞன் அந்தப் பேயைத் தன் ஆயுதத்தால் தாக்கிக் கொன்று விட்டான். ஆனால் கொஞ்ச நேரத்தில் கும்மிருட்டு ஆகிவிடும் என்றும், பேய்களைத் தன்னால் இருட்டில் கண்டு பிடித்துத் தப்பிக்க முடியாது என்றும் தெரிந்து கொண்ட

இளைஞன், ஏதாவது ஒரு பெரிய மரத்தின் மீது ஏறி ஒளிந்து கொண்டு இரவைக் கழிக்க எண்ணினான்.



உடனே அருகிலிருந்த வெண்மை நிறத்தில் பூக்கள் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்த ஒரு பெரிய மரத்தை அணுகி இரவில் தங்க இடம் கேட்டான். ஆனால் அந்த மரம் அவனுக்கு இடம் தர மறுத்து விட்டது. பேய்கள் இரவில் நடமாடும் போது அவனை இந்த மரத்தில் பார்த்து விட்டால் அவை அவனை மட்டுமல்லாமல் மரத்தையும் நாசமாக்கி விடும் என்று அந்த மரம் பயப்பட்டது.

இவ்வாறு மரம் தனக்கு இடம் அளிக்க மறுத்ததை எண்ணி, இளைஞன் கவலையும், பயமும் அடைந்தான். மற்றொரு மரத்தை அடைந்து, ''மரமே, எனக்கு இன்று இரவு தங்க இடம் தருவாயா? பேய்கள் என்னைக் கண்டால் சும்மா விடாது'' என்று கெஞ்சினான். ஆனால் அந்த மரமும் ''நாங்கள் மனிதர்களுக்கு உதவி செய்வதில்லை. நீ வேறிடம் பார்'' என்று சொல்லி விட்டது.

இரவில் தங்க இடம் தேடி ஒவ்வொரு மரமாக முயற்சி செய்து கொண்டிருந்த இளைஞனை, ஒரு பகார் மரம் பார்த்து இரக்கம் கொண்டது. அவனைத் தன்னிடம் அழைத்து ''என்னுடைய அடர்ந்த கிளைகளில் நீ மறைவாக உட்கார்ந்து கொண்டு இரவைக் கழிக்கலாம். அந்தப் பேய்களால் உன்னைப் பார்க்க முடியாது. சத்தம் செய்யாமல் மேலே ஏறி என்னிடம் ஒளிந்து கொள். பேய்கள் வந்தால் நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்றது.

தனது நன்றியை அந்த மரத்துக்குத் தெரிவித்துவிட்டு, அந்த இளைஞன் அடர்ந்த மரக்கிளைகளுக்குள் ஒளிந்து கொண்டான். நடு இரவாகி விட்டது. காட்டிலுள்ள பூச்சிகள் சத்தமிடும் ஒலி மட்டும் கேட்டது. திடீரென பேய்கள் கும்பலாக அந்தப் பக்கம் வந்தன.

''அவன் எங்கே? எங்கள் சகோதரனைக் கொன்ற அந்த மனிதன் எங்கே? அவனைக் கொல்ல வந்திருக்கிறோம்.

அவன் மட்டும் கிடைத்தால் அவனை கண்ட துண்டமாக வெட்டி விடு வோம்,'' என்று ஆத்திரத்துடன் கத்திக் கொண்டே அந்த வாலிபனைத் தேட ஆரம்பித்தன. ஒவ்வொரு மூலையி லும் தேடியும் அவனைக் காண முடியாததால் அந்தப் பேய்களின் ஆர்ப்பாட்டமும் கூக்குரலும் அதிகரி த்துக் கொண்டே போயின. அந்த சத்தத்தில் பூச்சிகளின் ஒலியும் காற்று வீசும் ஒலியும் அமுங்கிப் போயின.

பேய்கள் இப்போது ஒவ்வொரு மரத்தையும் நோக்கி, ''அவன் எங்கே?'' என்று கேட்டன. மரங்கள் தனக்குத் தெரியாது என்று சொல்ல, கடைசியில் இளைஞன் ஒளிந்திருந்த பகார் மரத்தை அடைந்தன. ''எங்கள் சகோதரனைக் கொன்ற அந்த மனிதன் எங்கே?'' என்று பகார் மரத்தைக் கேட்க, ''அவனை நான் பார்க்க வில்லை. அவன் காட்டில் வேறு எங்கேயோ ஒளிந்து கொண்டிருக் கிறான்,'' என்று அந்த மரம் சொல்லி விட்டது.

ஏமாற்றமடைந்த பேய்கள் இறுதியில் அந்த இடத்தை விட்டுச் சென்று விட்டன. மீண்டும் அந்தக் காட்டில் அமைதி நிலவியது. அபாயத் திலிருந்து தப்பித்துக் கொண்ட இளைஞன், ''பகார் மரமே, நீ எனக்கு செய்த உதவியை நான் என்றென்றும் மறக்க மாட்டேன்,'' என்று சொல்லி அந்த மரத்தை அன்புடன் தழுவிக் கொண்டான். பிறகு பத்திரமாக வீடு திரும்பிய அந்த இளைஞன், தன் கிராமத்திலுள்ள அனைவருக்கும் தனக்கு நேரவிருந்த அபாயத்தையும் பகார் மரம் தன்னை எவ்வாறு காப்பாற்றியது என்பதை யும் விவரித்தான். அவன் பத்திரமாகத் திரும்பி வந்த மகிழ்ச்சியில் கிராமத்து மக்கள் பெரிய விருந்தொன்று ஏற்பாடு செய்து தங்கள் மகிழ்ச்சியைக் கொண்டாடினார்கள். அந்த விருந் தில், தங்கள் கிராமத்து இளைஞனு க்கு பகார் மரம் செய்த பேருதவியைப் பாராட்டி, அன்றிலிருந்து பகார் மரத்தை வெட்டுவதில்லை என்று முடிவு செய்தார்கள். ஆகவேதான் இன்றும் நாகர்கள் பகார் மரத்தை மட்டும் வெட்டுவதில்லையாம்.



# செய்தி சுடர்

## நாள் முழுதும் எழுதிய கட்டுரை



மகாத்மா காந்தி ஒரு நல்ல எழுத்தாளராக இருந்திருக்கிறார். 'ஹரிஜன்' என்ற பத்திரிகையில் மட்டுமல்லாமல் மற்றும் பல பத்திரிகைகளிலும் ஏராளமாக எழுதியிருக்கிறார். ஆனால் அவரைப் பற்றிய ஒரு கட்டுரையை விடாமல் 24 மணி நேரம் எழுதி அற்புதச் சாதனை நிகழ்த்தியுள்ள சிறுமியைப் பற்றித் தெரியுமா? நந்தினி என்ற பதினொன்றாம் வகுப்பில் படிக்கும் சென்னையைச் சேர்ந்த ஒரு மாணவி காந்தியைப் பற்றி தனக்குத் தெரிந்ததையெல்லாம் விடாமல் ஒரே மூச்சில் எழுதத் தீர்மானித்தாள்.

பிப்ரவரி மாதம் 12ம் தேதி சென்னை மெரினாவின் காந்தி சிலையருகில் காலை 10 மணி அளவில் எழுத அமர்ந்த அந்தப்பெண், மறுநாள் காலை 10 மணி வரை காந்தியைப் பற்றி விடாமல் ஒரே மூச்சில் எழுதித் தள்ளினாள். முழுக்க முழுக்க காந்தியைப் பற்றி தன் ஞாபகத்தில் இருந்தவற்றையே எழுதியிருக்கிறாள் என்றால், இது மிகவும் பாராட்டத்தக்க சாதனை அல்லவா?

## நாள் முழுதும் மாயாஜாலக் காட்சி

தமிழகத்தில் திருச்சிராப்பள்ளி நகரில் உள்ள ஏ.அலெக்சாண்டர் 24 மணி நேரம் விடாமல் மாயாஜாலக் காட்சிகளை நிகழ்த்தினார். லண்டனிலுள்ள கின்னஸ் நிறுவனத்தினர், இந்திய மாயாஜாலக் காட்சியாளர்களின் தலைமையகத்தை, இந்த நிகழ்ச்சியைக் காணும்படி கேட்டுக் கொள்ள, அதன் அங்கத்தினர்கள், பத்திரிகையாளர்கள், அரசு அதிகாரிகள் முன்னிலையில் 24 மணி நேரம் விடாமல் மாயாஜாலங்கள் நிகழ்த்தி அலெக்சாண்டர் சாதனை புரிந்தார்.





# வாழ்க்கை வாழ்வதற்கே

லட்சுமணனுடைய பெற்றோர்கள் அவனுடைய பிள்ளைப்பருவத்தி லேயே இறந்து விட்டனர். ஒரே மகனான லட்சுமணனை அவனது பெற்றோர்கள் மிகுந்த அன்புடன் வளர்த்து வந்தனர். வாழ்க்கையில் ஒரு போதும் லட்சுமணன் மீது துன்பத்தின் நிழல்கூட விழாமல் கண்ணுங் கருத்து மாய் வளர்த்ததால், அவனுக்கு துன்பம் என்றால் என்ன என்றே தெரி யாமல் போய்விட்டது. சிறுவயதிலி ருந்தே பெற்றோர்களை மிகவும் சார்ந்து வளர்ந்ததால், அவர்களது பிரிவினை லட்சுமணனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. ஊண், உறக்கம் துறந்து, எப்போதும் தன் பெற்றோர்கள் நினைவாகவே இருந்து வந்தான். பல நாட்களாகியும் அவன் அதே நிலைமையில் அனைவரும் நடந்ததை மறந்துவிட்டு, ஆக்கப் பூர்வமான விஷயங்களில் மனதைச் செலுத்தி எதிர்காலத்தைப் பற்றி நினைக்குமாறு அறிவுரை புகன்றனர்.

ஆனால் தன் வாழ்க்கையின் மீதே விரக்தி அடைந்திருந்த லட்சுமணன், யாருடைய அறிவுரையையும் பொருட் படுத்தாமல் தன் துயர நினைவுகளி லேயே எப்போதும் மூழ்கி இருந்தான். சில தீயவர்கள், அவனது நிலைமையைக் கண்டு, அவனை ஏமாற்றி அவன் செல்வத்தை அபகரிக்கும் வேலையில் ஈடுபட்டனர்.

இப்படியிருக்கையில் ஒருநாள், ராமதாஸ் என்ற பெரியவர் லட்சு மணனைப் பார்க்க வந்தார். தன்னை அவனது சிற்றப்பன் என்று அறிமுகப் படுத்திக் கொண்ட பின், ராமதாஸ் அவனுக்கு அறிவுரை வழங்க ஆரம்பித் தார். ''லட்சுமணா, உன் மனநிலையை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் நீ இந்த வீட்டிலேயே வசிக்கும் வரை, உன்னுடைய கடந்த கால நினைவுகள் உன்னை தொடர்ந்து கொண்டேஇருக்கும். நீ என்னுடைய கிராமமான ராம்நகருக்கு வந்து விடு. அங்கு ஒரு பெரிய வீடு விற்பனைக்கு

- பிரமிளா நீஷித் -

உள்ளது. உன்னிடமுள்ள பணத்தை எல்லாம் திரட்டியெடுத்துக் கொண்டு வா. எனது கிராமத்தில் அந்த வீட்டை உனக்கு சொந்தமாக்கிக் கொண்டு அந்த வீட்டில் வசிக்கத் தொடங்கு. புதிய இடம், புதிய சூழ்நிலை உனது மனதை திசை திருப்பும். உன் வாழ்க்கையில் புதிய பகுதியைத் துவக்கு,'' என்றார்.

லட்சுமணனுக்கு அவர் கூறியது சரியெனத் தோன்றவே, கையில் புது வீடு வாங்க தன்னிடமுள்ள பணத்தை எல்லாம் எடுத்துக் கொண்டு அவருடன் ராம்நகர் நோக்கிப் புறப் பட்டான். செல்லும் வழியில் சற்றும் எதிர்பாரா வண்ணம் சில வழிப்பறி கொள்ளைக் காரர்கள் இருவரையும் வழி மறித்து இருக்கிற பணத்தை எல்லாம் கவர்ந்து கொண்டு சென்று விட்டனர். தனது தலைவிதியை நொந்து கொண்ட லட்சுமணனைத் தேற்றி, ராமதாஸ் மீண்டும் லட்சுமண னது கிராமத்தை அடைந்து அவனது சொந்த வீட்டிலேயே விட்டுவிட்டார். ராமதாஸ் வருத்தத்தில் மூழ்கி இருந்த லட்சுமணனை நோக்கி, ''லட்சுமணா! பணம் களவு போனதைப் பற்றி கவலைப்படாதே. அதை மீட்க முயற்சி செய்வோம். உன்னிடமுள்ள பணம் எல்லாம் இழந்து விட்டாய்.

இப்போது உனக்கிருக்கும் ஒரே சொத்து இந்த வீடுதான். இதை விற்று அதில் வரும் பணத்தைக் கொண்டு காலம் கழிப்பாயா?'' என்று வினவினர்.

''ஐயோ, இதை விற்று விட்டால், பிறகு நான் எங்கு வசிக்கமுடியும்?'' என்றான் லட்சுமணன்.



''அப்போது எஞ்சியுள்ள காலத்தை எவ்வாறு கழிப்பாய்? என்ன தான் வழி?'' என்று ராமதாஸ் வினவ, ''வேறு வழியில்லை. நான் இனி மேலும் சும்மா உட்கார்ந்து பழைய நினைவுகளிலேயே மூழ்கியிருக்க முடியாது. நான் வேலை செய்துதான் பிழைக்க வேண்டும்'' என்றான் லட்சுமணன். ''அப்படி வா, வழிக்கு'' என்று மனதிற்குள் மகிழ்ச்சியுடன் சொல்லிக் கொண்ட ராமதாஸ், ''நான் உனக்கு என் செலவில் உனது கிராமத்திலேயே கொஞ்சம் நிலம் வாங்கித் தருகிறேன். நானும் உன்னுடன் இருக்கிறேன். இருவரும் சேர்ந்து விவசாயம் செய்வோம்'' என்றார். ராமதாஸ் சிலநாட்களி லேயே பணத்துடன் வந்து லட்சுமண னுடன் சென்று கிராமப் பஞ்சாயத்துத் தலைவரின் உதவியுடன், லட்சு மணனது கிராமத்தின் எல்லையில்



கொஞ்சம் நிலம் வாங்கி அவனுக்கு அதை அளித்தார். அந்த நிலத்தை உழுது பயிரிடுவதில் லட்சுமணனுக்கு மிகவும் உதவி செய்தார். இருவரும் சேர்ந்து தனக்கு வேண்டிய உணவை தானே சமைத்துக் கொண்டு, உண்டு உறங்கி ஒரே வீட்டில் இருந்தனர். ஒருநாள் பஞ்சாயத்துத் தலைவரின் பதினாறு வயது நிரம்பிய செல்லப் பெண்ணான கௌரி, லட்சுமணன் வீட்டுக்கு வந்தாள். ''அடடா, சமையல் வேலையை ஆண்களாகிய நீங்கள் ஏன் செய்ய வேண்டும்? எனக்குத் தெரிந்த ஒரு பெண்ணை உங்களுக்கு சமைப்பதற்காக அனுப்பு கிறேன். நீங்கள் சிரமப்பட வேண்டாம்.'' என்றாள். அன்றி லிருந்து ஒரு சமையற்காரி சமைத்து வைக்க, லட்சுமணனும் ராமதாஸ¬ம் வயிராற சாப்பிட்டனர்.

இப்படியாக ஆறு மாதங்கள் கழிந்தன. வயலில் அவர்கள் உழைத்த உழைப்பிற்கு நல்ல பலன் கிடைத் தது. லட்சுமணன் இதைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தான். அப்போது ராமதாஸ் சொன்னார், ''லட்சுமணா! முன்பு எப்படிஇருந்தாய்? இப்போது எப்படி உள்ளாய்? உன்னிடமுள்ள செல்வத்தை இழந்து, இனி உழைத்துத்தான் பிழைக்க வேண்டும் என்ற நிலை வந்தவுடன் நீ பழைய நினைவுகளைக் களைந்துவிட்டு உன் கவனத்தையெல்லாம் விவசாயத்தின் மீது திருப்பினாய். உன் பெற்றோரை நினைத்து வருந்தி வீணாக நேரம் கழிக்கவில்லை. தீயவர்களுடன் சேர்ந்து உன் செல்வத்தை வீணாக்க வில்லை. மாறாக செய்யும் தொழில் மீதே உன் கவனம் எல்லாம் இருந்தது.''

''ஆமாம் சிற்றப்பா, நீங்கள் சொல்வது உண்மை.''

''லட்சுமணா, இதுதான் வாழ்க்கை என்பது. உழைக்காமலே வயிறு நிரம்ப உண்டு வாழ்ந்தால், மனம் வீணான சிந்தனைகளிலேயே உழன்று கொண்டிருக்கும். இதனால் உனது நிம்மதி, நேரம், ஆரோக்கியம் எல்லாமே வீணாகிறது. ஆகையால் மனிதன் எப்போதும் ஏதாவது வேலையில் ஈடுபட்டு தனது உடலையும், மனதையும் சுறுசுறுப் பாக வைத்துக் கொள்ள வேண்டும். இப்படியிருந்தால் அவனுக்கும் நன்மை, அவனைச் சார்ந்துள்ள சமூகத் துக்கும் நன்மை உண்டாகும்.'' என்றார். ''சிற்றப்பா! நீங்கள் என்

கண்களைத் திறந்து எனக்கு புது வாழ்வு கொடுத்திருக்கிறீர்கள்,'' என்று லட்சுமணன் நன்றியுடன் கை கூப்பினான்.

உடனே ராமதாஸ் ''பொறு லட்சுமணா! இன்னும் கேள். பஞ்சாய த்துத் தலைவர் ராமன் உனது தந்தையின் நண்பர். அவர் எனக்கு தூரத்து உறவினரும் கூட.'' தாய் தந்தையரைப் பிரிந்து நீ மனங்கலங்கி இருந்ததையும் உனது தீய நண்பர்கள் உன்னை ஏமாற்ற முயன்றதையுங் கண்ட ராமன் எனக்கு தகவல் சொல்லி அனுப்பினார். நாங்கள் இருவரும் கலந்து உன்னைப் பற்றி ஆலோசித் தோம். இதுநாள் வரை நடந்த தெல்லாம், நாங்கள் முன்பு செய்த திட்டமே. இதைக் கேட்டால் நீ ஆச்சரியப் படுவாய். செல்லும் வழியில் ஒரு வழிப்பற்றி கொள்ளை நடந்தே, அது கூட நாங்கள் திட்ட மிட்ட நாடகத்தின் ஒரு பகுதியே. உன் பணம் பத்திரமாக உள்ளது. இன் னொரு விஷயமும் கூறுகிறேன். ராமனின் புதல்வி கௌரி உன்மீது மிகுந்த அன்பும், பரிவும் கொண்டு உள்ளாள். உனக்காக சமையற்காரியை நியமித்தது மட்டுமல்லாமல், அவள் நன்கு பக்குவமாக சமைக்கிறாளா என்பதை கண்டறிய இங்கு வந்து அடிக்கடி மேற்பார்வையிட்டும் போகிறாள். நமது வீட்டையும் சீர் படுத்திவிட்டுப் போகிறாள். இப்படிப் பட்ட அந்த கௌரியைப் பற்றி நீ என்ன எண்ணுகிறாய்?'' என்று வினவினார். லட்சுமணனும் வெட்கத் துடன் அவளை தனக்கு மிகவும் பிடித்திருப்பதாகக் கூறினான். ''மிகவும் நல்லது. விரைவிலேயே உங்கள் திருமணத்திற்கு ஏற்பாடு செய்கிறோம். அதுசரி, லட்சுமணா! வாழ்க்கையைப் பற்றி நீ இப்போது என்ன நினைக்கிறாய்?'' என்று கேட்டார் ராமதாஸ்.

''கடந்த காலத்தைப் பற்றியே நினைத்து வருந்தி நேரத்தை வீணாக்குவதை விட மனதை ஆக்கப் பூர்வமான விஷயங்களில் செலுத்தி, வாழ்க்கை தனக்கும் மற்றவர் களுக்கும் பயன் உள்ளதாகச் செய்ய வேண்டும் என்றும் வாழ்க்கை வாழ்வதற்கே என்றும் தெரிந்து கொண்டேன்,'' என்றான் லட்சுமணன் மன நிறைவுடன்.



# விடா முயற்சி

**ப**ன்னிரெண்டு வயதான ரங்கநாதனுக்குப் படிப்பில் இப்போதெல்லாம் கவனம் செல்லவில்லை. ஓரளவு கடுமையாக உழைத்தும், தேர்வுகளில் மிகக் குறைவாக மதிப்பெண்கள் வாங்கத் தொடங்கினான். இதனால் தனக்கு இனிமேல் படிப்பு வராது என்று சலித்துப் போய் விரக்தி அடைந்தான்.

அவன் தந்தை அவனைப் பலமுறை இதற்காகக் கடிந்து கொண்டார். முன்பெல்லாம் படிக்கிற பிள்ளை என்ற எண்ணத்தில் விதவிதமாக வீட்டில் அவனுக்கு சாப்பிடக் கிடைத்தது. இப்போது அவை குறைந்து விட்டன. நன்றாகப் படித்து தேர்வில் வெற்றிபெறும் ஆசையே அவனுக்குப் போய்விட்டது.

தனது நண்பர்களுடன் விளையாடும் போது அவனுக்கு ஒருநாள் காலில் காயம்பட்டது. அவன் வீட்டுத்திண்ணையில் அமர்ந்திருந்த போது, ஈக்கள் அவனது காயத்தை மொய்க்க ஆரம்பித்தன. அவற்றை எத்தனை முறை துரத்தி விட்டாலும், மீண்டும் மீண்டும் அவனது காயத்தை அவை மொய்க்க வந்தன. கோபமடைந்த ரங்கநாதன் ஈக்களை உரத்தக் குரலில் திட்ட ஆரம்பித்தான்.

அப்போது அந்தத் தெரு வழியே சென்று கொண்டிருந்த அவனது ஆசிரியர் ரங்கநாதனது செயலைக் கண்டார். அவன் அருகில் வந்து ''ரங்கநாதா! உன் செயல்களை நான் பார்த்துக் கொண்டிருந்தேன். ஈக்கள் போன்ற சிறிய உயிரினங்கள் தான் விரும்பியதை அடைவதற்காக பலமுறை முயற்சி செய்யும் போது பகுத்தறிவுள்ள மனிதர்களுக்கு அதைவிடப் பல மடங்கு விடாமுயற்சி இருக்க வேண்டுமல்லவா! யோசித்துப்பார்,'' என்று கூறி அகன்றார்.

ஆசிரியரின் அறிவுரை ரங்கநாதனின் மனதை மாற்றியது. மீண்டும் மனதை ஒருமுகப் படுத்திப் பாடங்களை படித்து தேர்வில் முதல் வகுப்பில் தேறினான்.






# வாசகர்களுக்குக் கதைப் போட்டி

## சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

**கீழ்காணும் கதையைப் படியுங்கள்:**



யாரும் தன்னை அடையாளம் காண முடியாதபடி இரவில் தன் ராஜ்ஜியத்தில் உள்ளத் தெருக்களில் சுற்றி வருவது விஜயபுரி மன்னனுடைய வழக்கம். ஒருமுறை அவன் அப்படிச் செய்யும்போது, ஏராளமான மக்கள் நடைபாதையிலும் மரத்தடியிலும் உறங்குவதைக் கண்டு மன்னன் வருத்தமுற்றான். சொந்த வீடு இல்லாமல் யாரும் தன் ராஜ்ஜியத்தில் இவ்வாறு துன்பப்படக் கூடாது என்று தீர்மானித்தான். மறுநாள் வீடு தேவைப்படுபவர்களை எல்லாம் தன் அரண்மனையில் கூடுமாறு மன்னன் அறிவித்ததும், ஆயிரக்கணக்கான மக்கள் கூடி விட்டனர். அத்தனை மக்களுக்கும் வீடு கட்டித் தருமளவுக்கு பொக்கிஷத்தில் பணம் இல்லாதது கண்டு மன்னன் கவலையுற்றான்.

அதைக் கண்டு அவனது அமைச்சர் அவனுக்கு சில யோசனைகள் கூறினார். அந்த யோசனைகள் என்னவாக இருக்கும் என்று உங்களால் ஊகிக்க முடியுமா?

- ♦ கூடியிருந்த மக்களை பணங்கொடுத்து உதவச் சொல்லியிருப்பாரா?
- ♦ வீடு கட்டும் பணியில் அனைவரையும் கூலியின்றி ஈடுபடச் சொல்லியிருப்பாரா?
- ♦ இது இரண்டுமே இல்லையெனில் என்ன தான் சொல்லியிருப்பார்?

நீங்கள் உங்கள் விளக்கத்தை 100-150 சொற்களில் எழுதி ஒரு உறைக்குள் வைத்து உறைமீது கதைப் போட்டி என எழுதி அனுப்பவும். கீழே கொடுக்கப்பட்டுள்ள கூப்பனையும் சேர்த்து அனுப்ப வேண்டும்.

## முடிவு தேதி : மே 30, 2004

பெயர் ------------------------------------வயது-----------பிறந்த தேதி-----------------

பள்ளியின் பெயர் ------------------------------------------------------------------------------

வகுப்பு-------------------------------வீட்டு முகவரி------------------------------------------

------------------------------------------------------------------------------------------------------

---------------------------------------------------------------பின்கோடு--------------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்

**சந்தமாமா இந்தியா லிமிடெட்**

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.



# திறமைசாலியே!

பிரம்மதத்தன் காசியை ஆண்ட காலத்தில் போதிசத்வர் வைசிய குலத்தில் பிறந்து 'வர்த்தக சிரோன் மணி' என்று அழைக்கப் பட்டார் அவர் நல்ல அறிவாளி. எல்லா சாஸ்திரங்களையும் நன்கு கற்று உணர்ந்தவர்.

ஒரு நாள் அவர் அரச சபைக்குப் போய்க் கொண்டிருக்கையில் வழியில் ஒரு செத்த எலியைக் கண்டு ''இதைக் கூட யாராவது திறமைமிக்க இளைஞன் எடுத்துப் போய்ப் பயன் படுத்தினால் அவன் கோடீஸ்வர னாகக் கூட ஆகலாம். எதற்கும் முயற்சிதான் தேவை'' எனச் சற்று உரக்கக் கூறியவாறே சென்றார்.

அதை ஆனந்தன் என்ற வாலிபன் கேட்டு விட்டான். அவன் போதி சத்வரை தெய்வத்தின் மறு அவதாரம் எனக் கருதுபவன். எனவே அவரது வாக்குப் பலிக்கும் என எண்ணி அந்த செத்த எலியை எடுத்துக் கொண்டு கடைத் தெருவிற்குப் போனான். அதை ஒரு பூனைக்கு இரையாகக் கொடுக்க ஒரு கடைக்காரன் ஒரு செப்புப் பணம் கொடுத்து வாங்கிக் கொண்டான்.

ஆனந்தன் அந்தப் பணத்திற்கு வெல்லக் கட்டிகளை வாங்கினான். ஒரு பெரிய பானையில் நீர் நிரப்பி அதனையும் வெல்லக் கட்டிகளை யும் எடுத்துக் கொண்டு அவன் ஓரிடத்தில் உட்கார்ந்தான். அவ்வழி யே பூக்காரர்கள் பூப்பறித்துக் கொண்டு செல்வார்கள். அவர்கள் அன்று ஆனந்தனைக் கண்டு அவனி டம் வெல்லமும் நீரும் கேட்டு வாங்கிச் சாப்பிட்டார்கள். போகும் போது ஒவ்வொருவரும் கை நிறைய பூக்களை அள்ளி எடுத்து அவனுக்குக் கொடுத்து விட்டுப் போனார்கள்.

ஆனந்தன் அந்தப் பூக்களை விற்று மேலும் வெல்லம் வாங்கி முந்தைய நாளைப் போலவே நீர்ப் பானை

யுடன் வழியில் உட்கார்ந்தான். அன்றும் பூக்காரர்கள் வந்து வெல்ல மும் நீரும் வாங்கிச் சாப்பிட்டு நிறையப் பூக்களைக் கொடுத்துப் போனார்கள். ஆனந்தனும் அவற்றை விற்றுப் பணமாக்கி வெல்லம் வாங்கி நீர் சுமந்து வந்து தினமும் அவர் களுக்குக் கொடுக்கலானான். அவர் களும் பதிலுக்கு மலர்களைக் கொடுக்க அவற்றை விற்று ஆனந்தன் பணம் சேர்க்கலானான்.

அவனிடம் பத்து வெள்ளிப் பணங்கள் சேர்ந்து விட்டன. அவன் தினமும் நீரும் வெல்லமும் கொடுப் பதை நிறுத்தவில்லை. ஒரு நாள் இடியும் மழையும் பெய்து அரசனின் தோட்ட மரக்கிளைகளை ஒடித்து தோட்ட முழுவதும் பரப்பியது. அதை எப்படி அப்புறப் படுத்துவது எனத் தோட்டக்காரன் திகைத்தான். அப்போது ஆனந்தன் அவனிடம் ''இந்த உலர்ந்த குச்சிகளையும் இலைகளையும் எனக்குக் கொடுத் தால் நான் அப்புறப்படுத்தி விடுகி றேன்'' என்றான். தோட்டக்காரனும் சம்மதிக்க ஆனந்தன் சில சிறுவர் களுக்கு வெல்லக்கட்டிகள் கொடுத்து அந்தக் குப்பையை ஓரிடத்தில் குவித்தான்.

அப்போது அரண்மனைக் குயவன் அவ்வழியே வந்து அந்த உலர்ந்த குச்சிகளையும் இலைகளையும் பார்த்து ஆனந்தனிடம் விலை பேசினான். அதற்கு இருபத்தைந்து வெள்ளிப் பணம் கொடுத்து வாங்கிக் கொண்டான்.



ஆனந்தன் அதைக் கொண்டு நிறைய புல்கட்டுகளை வாங்கினான். அன்று அராபியநாட்டு வியாபாரி ஒருவன் தன் ஐநூறு குதிரைகளுடன் அவ்வூருக்கு வந்திருந்தான். அவன் தன் குதிரைகளுக்குப் புல் வாங்க வந்து ஆனந்தனிடம் ஏராளமான புல் கட்டுகள் இருப்பது கண்டு நல்ல விலை கொடுத்து அவற்றை வாங்கிக் கொண்டான். இதனால் ஆனந்த னுக்கு ஆயிரம் வெள்ளிப் பணம் கிடைத்தது.

ஆனந்தன் துறைமுகத்திற்குப் போய் அப்போதுதான் ஒரு கப்பல் புதிய சரக்குகளோடு வந்திருப்பதைக் கண்டான். உடனே அதன் வியாபாரி யைக் கண்டு தான் அந்தச் சரக்கு முழுவதையும் வாங்கிக் கொள்வ தாகக் கூறி விலை பேசி ஆயிரம் வெள்ளிப் பணத்தை முன் பணமாகக் கொடுத்தான்.

இதற்குள் கப்பல் வந்தது கேட்டு பல வியாபாரிகள் அதனை ஆனந்தன் வாங்கியதை அறிந்தனர். அவர்கள் ஆனந்தனிடமிருந்து அவன் சொன்ன விலைக்கு அச்சரக்குகளை வாங்கிக் கொண்டு போனார்கள். இதில் அவனுக்கு லட்சம் லட்சமாக லாபம் கிடைத்தது. ஆனந்தன் அதிலிருந்து ஒரு லட்சம் வெள்ளிப் பணம் எடுத்துக் கொண்டு போய் போதிசத்வ ரான வர்த்தக சிரோன்மணியின் முன் வைத்து ''தாங்கள் கூறியபடி நடந்த தால் எனக்கு நிறையப் பணம் கிடைத்தது. இதை ஏற்றுக் கொள் ளுங்கள்'' என்றான்.

போதிசத்வரும் ''நான் சொன்னே னா? எப்போது?'' என்று கேட்க அவனும் அவர் செத்த எலியைப் பார்த்துக் கூறியதைச் சொல்லி தான் அதனை எடுத்துப் போய் விற்று படிப்படியாகப் பணம் பெற்ற விதத்தையும் கூறினான்.

அது கேட்ட போதிசத்வர் மகிழ்ந்து அவனுக்குத் தன் மகளை திருமணம் செய்து வைத்தார். அப்படிப்பட்ட அறிவு மிகுந்த வாலிபனை தம்முட னேயே வைத்துக் கொண்டு தன் சொத்து முழுவதையுமே அவனிடம் ஒப்படைத்து விட்டார்.





# மகாவிஷ்ணு

மகாவிஷ்ணு தம் வாசல் காப் போர்கள் ஜெயனிடமும் விஜய னிடமும் ''நீங்கள் ஏழு பிறப்புகள் எடுத்து என் நண்பர்களாக இருந்து முடிவில் என்னை அடைய விரும்பு கிறீர்களா அல்லது மூன்று பிறப்புகள் எடுத்து என் கடும் பகைவர்களாக இருந்து முடிவில் என் கையாலேயே மடிந்து வைகுண்டத்திற்கு வர விரும்புகிறீர்களா?'' என்று கேட்டார். அவர்களும் விஷ்ணுவை விரைவில் அடைய வேண்டும் என எண்ணி ''மூன்று பிறப்புகளில் உங்கள் விரோதிகளாக இருந்து நற்கதி பெறுகி றோம்.'' என்று தம் விருப்பத்தைத் தெரிவித்தார்கள். அப்போது சனகர், நந்தனர் முதலிய முனிவர்கள் அவர்களைப் பாராட்டி விஷ்ணு விடம் ''நாங்கள் அவசரப்பட்டு இவர்களைச் சபித்து விட்டோம். அதற்காக மனம் வருந்துகிறோம். எங்களை மன்னித்து விடுங்கள்'' எனக்கூறி அவரை வணங்கி விடை பெற்றுக் கொண்டு சென்றார்கள்.

ஜெயனும் விஜயனும் கஸ்யபப் பிரஜாபதியின் மனைவி திதியின் மகன்களாக இரண்யகசிபு என்றும் இரண்யாட்சன் என்ற பெயரிலும் பிறந்தார்கள். அவர்கள் பெரியவர் களாகி பிரம்மாவைக் குறித்து தவம் செய்து பல அரிய வரங்களைப் பெற்றார்கள். அவர்கள் விஷ்ணுவைக் கடும் பகைவராகக் கருதி வெறுத்து வந்தார்கள்.

இரண்யாட்சன் விஷ்ணுவை இகழ்ந்தும் பல அநியாய அட்டூழிய ங்களைச் செய்தும் வந்தான். பூமியை யே தூக்கிக் கொண்டு போய் அவன் ரசாதலத்திலுள்ள சமுத்திரத்தில் போட்டு விட்டான். பூமாதேவி



விஷ்ணுவை தியானித்துத் தன்னை காப்பாற்றும்படி வேண்டினாள்.

அச்சமயத்தில் பிரம்மதேவன் யாகம் செய்து கொண்டிருந்தார். அந்த யாகத்திலிருந்து ஒரு சிறு ஒளி தோன்றியது. அதுவே மிகப்பெரியதாகி வெள்ளைப் பன்றியாகியது. இவ்வாறு விஷ்ணுவும் பூமாதேவியின் பிரார்த்தனைக்கு இணங்கி வராகவதாரம் எடுத்தார். அந்த வராகம் மிகப்பெரிதாகி பலமுள்ளதாய் கூரிய மூக்கைக் கொண்டதாக ஆயிற்று. அந்த வராகம் ரசாதலத்தை நோக்கி வேகமாகச் சென்றது. ரசாதல உலகில் சமுத்திரத்தினுள் அது மூழ்கி அதன் அடியில் இருந்த பூமியைத்தன் கூரிய வாய்முனையால் உயரத்தூக்கியது. அப்போது இரண்யாட்சன் வருணன் தான் அப்படிச் செய்கிறான் என நினைத்து அவனைப் போருக்கு அழைத்தான்.

வருணனோ ''பூமியைக் கடலிலிருந்து தூக்கியது நான் அல்ல. அதோ அந்த யக்ஞவராகம்தான். எனவே நீ அதனோடு சண்டை போடு'' என்றான். இரண்யாட்சனும் வராக உருவில் இருப்பது மகாவிஷ்ணுதான் என அறிந்து கோபம் கொண்டு உக்கிரமாக அதனைத் தாக்கினான். இருவருக்கிடையே பயங்கரப் போர் நிகழ்ந்தது. முடிவில் வராக வடிவில் இருந்த விஷ்ணு தன் கூரிய மூக்கினால் மாடு முட்டுவதுபோல இரண்யாட்சனைக் குத்திக் கொன்றார்.

பூமாதேவி ஆனந்தக் கண்ணீர் வடித்தாள். மகாவிஷ்ணுவையே அவள் மணந்து கொண்டாள். மகாவிஷ்ணுவும் அவளை அழைத்துக் கொண்டு வைகுண்டம் சென்றார். அங்கு அவர் அவளைத் தன் தொடை மீது அமர்த்திக் கொண்டு காட்சி அளிக்க பிரம்மா முதலிய தேவர்கள் மலர் மாரி பொழிந்து புகழ்ந்து பாடினார்கள். விஷ்ணு பன்றி உருவில் வந்து தன் தம்பியான இரண்யாட்சனைக் கொன்றதால் அவரைப் பழிக்குப் பழி வாங்குவது என்று இரண்யகசிபு தீர்மானித்தான். அதற்காகத் தவம் செய்து பிரம்மாவிடமிருந்து அரிய வரங்களைப் பெறுவது எனத் தீர்மானித்துக் கொண்டு அவன் காட்டிற்குச் சென்றான். அப்போது அவன் மனைவி லீலாவதி கர்ப்பமுற்று இருந்தாள். இரண்யகசிபுவிற்குப் பிறக்கப் போகும் மகனும் அவனைப் போல குணம் படைத்தவனாக இருப்பானோ என பயந்த இந்திரன் லீலாவதி



யின் கர்ப்பத்தில் வளரும் குழந்தையை அந்த நிலையிலேயே கலைத்து ஒழிக்க ஆகாய வழியாகச் சென்று கொண்டிருந்தான். அவனைச் சந்தித்த நாரதர் ''தேவேந்திரா! உன் இந்த முயற்சியை விட்டுவிடு. எப்போது பார்த்தாலும் விஷ்ணுவைப் பற்றி மனதில் இரண்யகசிபு நினைத்து அவரைப் பழி வாங்க நினைத்துக் கொண்டே இருந்தான் அல்லவா? அச்சமயத்தில் லீலாவதி கர்ப்பமுற்றதால் அவளது குழந்தை விஷ்ணு பக்தனாகி விட்டது என்றார். பின்னர் அவர் லீலாவதியைத் தன் ஆசிரமத்திற்கு அழைத்துச் சென்றார்.

ஆசிரமத்தில் நாரதர் தினமும் லீலாவதிக்கு விஷ்ணுவின் பெருமையையும் நாராயண நாம மகிமையையும் மற்றும் பல வேதாந்த விஷயங்களையும் கூறி வரலானார். அவளது கர்ப்பத்திலிருந்த சிசு கவனமாகக் கேட்டுத் தன் மனதில் பதிய வைத்துக் கொண்டு விட்டது. உரிய காலத்தில் லீலாவதி ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள்.

இரண்யகசிபுவின் கடுந்தவத்தைக் கண்டு காட்டில் கடுந்தவம் புரிந்து பிரம்மாவை மகிழ்வித்தான். பிரம்மாவும் அவன் முன் தோன்றி என்ன வரம் வேண்டும் என்று அவனிடம் கேட்டார். இரண்ய கசிபுவும் ''நான் பூமி மீதோ ஆகாயத்திலோ இரவிலோ பகலிலோ வீட்டினுள்ளேயோ அல்லது வெளியிலோ மனிதனாலோ மிருகத்தாலோ தேவர்களாலோ மரணம் அடையக் கூடாது. உலகின் எந்த ஜீவராசியும் என்னைக் கொல்லும் சக்தி பெற்றிருக்கக் கூடாது'' என்று பல அரிய சக்திகள் கொண்ட வரங்களைக் கேட்டான். பிரம்மாவும் அவன் கேட்ட வரங்களைக் கொடுத்து விட்டு மறைந்தார்.

சக்தி வாய்ந்த வரங்களைப் பெற்ற பெருமையோடு இரண்யகசிபு காட்டிலிருந்து தன் அரண்மனைக்குத் திரும்பலானான். அப்போது நாரதர் அவனைச் சந்தித்து அவன் மனைவி லீலாவதிக்கு ஆண் குழந்தை பிறந்திருப்பதையும் அவள் தன் ஆசிரமத்தில் இருப்பதையும் கூறி அவனைத் தன்னோடு அழைத்துச் சென்றார்.

அங்கு இரண்யகசிபு தன் மனைவியையும் மகனையும் கண்டு மகிழ்ந்தான். அக்குழந்தைக்குப் பிரகலாதன் என்ற பெயர் வைக்கப் பட்டது. அதன் பிறகு அவன் தன் மனைவியையும் மகனையும் அழைத்துக் கொண்டு நாரதரிடம் விடை பெற்றுத் தன்



அரண்மனைக்குக் கிளம்பிச் சென்றான்.

இந்திரனை வெல்ல நினைத்து இரண்யகசிபு தேவலோகத்தின் மீது படை எடுத்துச் சென்றான். அவன் தேவேந்திரனை வென்று அவனது சிம்மாசனத்தில் அமர்ந்தான். எட்டுத் திசையின் அதிபர்களும் அவனுக்கு அடங்கிப் போனார்கள். அவன் தேவர்களைத் துன்புறுத்தினான். இந்திரனின் மனைவியான சசி தேவியை அவன் அவமானப்படுத்த முயன்றபோது லீலாவதி குறுக்கிட்டுத் தடுத்தாள். அதனால் இந்திராணியின் மானம் தப்பியது. இரண்யகசிபு எல்லோரையும் வென்று விட்ட மமதையில் தவம் செய்யும் முனிவர்களைத் துன்புறுத்தினான். விஷ்ணுவை எந்த விதத்திலும் வழிபடக் கூடாது என்று எங்கும் அறிவித்தான். எங்கு தேடியும் விஷ்ணு இல்லாதது கண்டு அவன் ''ஓ! விஷ்ணு நான் வருவது தெரிந்து பயந்து போய் எங்கோ ஓடி ஒளிந்து கொண்டு விட்டானா? இவனா வீரன்?'' எனக் கூறியவாறே திரும்பிச் சென்றான்.

பிரகலாதன் வளர்ந்து பெரியவனானான். அவன் எப்போதும் நாராயணனின் திருநாமத்தையே உச்சரித்து வந்தான். இதைக் கண்ட இரண்யகசிபு தன் மகனைத் திருத்தத் தன் குருவின் புதல்வர்களான சண்டமார்க்கர்களிடம் ஒப்படைத்தான். பிரகலாதன் குருகுலவாசத்தின் போது எல்லா சாஸ்திரங்களையும் கற்றும் நாராயணனின் திருநாமத்தை எப்போதும் உச்சரித்தும் வந்தான். அது மட்டுமல்ல, தன்னோடு படிப்பவர்களையும் நாராயணனின் திவ்விய நாமத்தை உச்சரிக்கும்படிக் கூறிப் பழக்கப் படுத்தினான்.

இது கண்டு சண்டமார்க்கர்கள் பயந்து பிரகலாதனை இரண்யகசிபுவிடம் அழைத்து சென்றனர். இரண்யகசிபுவும் தன் மகனைத் தன் மடிமீது அமர்த்திக் கொண்டு அவன் கற்றதை எல்லாம் கூறும் படிச் சொன்னான். உடனே பிரகலாதன் நாராயண நாமத்தை உச்சரித்து விஷ்ணுவின் மகிமை பற்றி விரிவாகக் கூறினான்.

அது கேட்டு இரண்யகசிபு கோபம் கொண்டு தன் மகனை கீழே தள்ளிவிட்டு சண்டமார்க்கர்களிடம் ''இது தான் நீங்கள் கற்றுக் கொடுத்ததா?'' என்று கோபத்தோடு கேட்டான்.

அவர்களும் பயந்து தாம் அவ்வாறு சொல்லிக் கொடுக்கவில்லை என்று கூறி பிரகலாதன் குருகுல வாசத்தின்

போது மற்ற மாணவர்களுக்கும் இப்படி உபதேசித்ததாக கூறினார்கள். அப்போது இரண்யகசிபு ''அடே பிரகலாதா! இந்த விஷ்ணு உன் சிற்றப்பாவைக் கொன்றவன். நம் குலத் துரோகியைப் புகழ்வதா? இனி மேலும் அவன் பெயரைக் கூறாதே. மறந்து விடு'' என்றான்.

பிரகலாதனோ ''என் உடலில் உயிர் உள்ள வரையில் அவரது திருநாமத்தை உச்சரித்துக் கொண்டு தான் இருப்பேன்'' என்றான். அது கேட்டு இரண்யகசிபு கடுங்கோபம் கொண்டு ''இவனுக்கு உண்ண உணவும் குடிக்க நீரும் கொடாமல் சிறையில் தள்ளுங்கள்'' என்று கட்டளை இட, வீரர்களும் அவனை இழுத்துப் போய்ச் சிறைச்சாலையில் அடைத்தார்கள்.

பிரகலாதனின் தாய் லீலாவதியோ துடி துடித்துப் போனாள். நாட்கள் சில கழிந்தன. இரண்யகசிபுவும் சிறை யில் பிரகலாதன் நினைவிழந்து மெலிந்து விழுந்து கிடப்பான் என எண்ணி அவனை அழைத்து வரும் படிக் கட்டளை இட்டான். பிரக லாதன் வந்த போது அவனைக் கண்டு இரண்யகசிபு திடுக்கிட்டான். ஏனெனில் அவன் உடல் மெலிந்து விடவில்லை முகம் வாடி விட வில்லை. புன்னகை புரிந்தவாறே 'நாராயண நம' எனக் கூறிக் கொண்டே இருந்தான்.

அது கேட்டு இரண்யகசிபுவின் கோபம் அதிகரித்தது. அவனை யானையின் காலடியில் போட்டு மிதிக்கச் செய்யக் கட்டளை இட்டான். யானையோ பிரகலா



தனைக் கண்டதும் சிங்கத்தைப் பார்த்து பயப்படுவது போலப் பின் வாங்கி ஓடியது. பிரகலாதன் மீது பாம்புகளை ஏவும்படி இரண்யகசிபு கட்டளை இட்டான். அவை பிரகலா தனைச் சுற்றி வந்து வணங்கி விட்டுப் போய் விட்டன.

பின்னர் மலையிலிருந்து உருட்டி யும், கடலில் தள்ளியும், விஷம் கொடுத்தும் இரண்யகசிபு பிரகாலா தனைக் கொல்லப் பார்த்தான். ஆனால் எவற்றாலும் பிரகலாதனைக் கொல்ல முடியாதது கண்டு இரண்யகசிபு ஆச்சரியத்தோடு, ''என்ன செய்தாலும் நீ இறக்காமல் இருக்கிறாயே இதன் மர்மம் என்ன?'' என்று கேட்டான்.

பிரகலாதனும் சிரித்தவாறே ''இதில் மர்மம் என்ன இருக்கிறது? நான் நாராயணனை எதிலும் காண்கி றேன். நீரிலும் ஜீவராசிகளிலும் விஷத்திலும் அவர் இருக்கிறார். எல்லாம் அவரது லீலாவினோதமே. அதனால்தான் என்னை இவற்றால் எதுவும் செய்ய முடியவில்லை'' என்றான். அது கேட்டு இரண்யகசிபு கோபம் கொண்டு பிரகலாதனை இழுத்துப் போய் தர்பாரில் ஒரு பெரிய தூணின் முன் நிறுத்தி ''அடே! நீ கூறும் நாராயணன் எப்பொருளிலும் இருப்பதாகக் கூறுகிறாயே. என் தம்பியைக் கொன்ற அந்த விஷ்ணு இந்தத் தூணில் இருக்கிறானா?'' என்று கேட்டான்.

பிரகலாதன் ''ஆகா! அவர் தூணிலும் இருக்கிறார். துரும்பிலும் இருக்கிறார் எங்கும் இருக்கிறார்'' என்றான். இரண்யகசிபுவும் ''அப்படி யா! இதனை உதைத்துப் பிளக்கிறேன். எங்கே இதிலிருந்து அந்த விஷ்ணு வருகிறானா என்று பார்க்கிறேன்'' என்று கூறி எதிரே இருந்த தூணை ஓங்கி உதைத்தான்.

அப்போது அண்டமே கிடுகிடுக் கும் படியான சத்தம் ஏற்பட்டது. தூண் பிளந்தது. அதிலிருந்து அது வரை உலகிலேயே சிருஷ்டிக்கப் படாத உருவம் வந்தது. அதன் உடல் மனிதனுடையதாகவும் தலை சிங்கத் தினுடையதாகவும் இருந்தது. பற் களும் கூரிய நகங்களும் பயங்கரமாக இருந்தன. இதுதான் விஷ்ணு எடுத்து வந்த நரசிம்மாவதாரம்.





# கொள்ளிவாய் அரக்கன்

பல லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர், ஃபிஜீத்தீவிலிருந்த மக்களுக்கு தீயின் உபயோகத்தைப் பற்றி தெரிந்திருந்தும் தீயினை உண்டாக்கும் விதம் தெரியவில்லை. அப்போது அந்தக் காலத்தில் ரோடுமா என்ற மலையிலுள்ள குகையொன்றில் ஓர் அரக்கன் இருந்து வந்தான். அவனது வாயிலுள்ள பற்களிலிருந்து தீ எப்போதும் எரிந்து கொண்டே இருக்கும். அவன் வாயைத் திறந்தாலே போதும், அந்தக் கொள்ளிவாய் அரக்கனின் வாயிலிருந்து வரும் தீச்சுடர்கள் காட்டில் உள்ள மரம் செடி கொடிகளை எல்லாம்கூட எரித்துவிடும். இந்த அரக்கனைக் கண்டு ஊரிலுள்ள மக்கள் மிகவும் பயந்தனர். ஒரேயொரு ஆறுதலான விஷயம் என்னவென்றால், இந்த அரக்கன் பெரும்பான்மையான நேரம் கும்பகர்ணனைப் போல் உறங்கிக் கொண்டேயிருப்பான். இந்த அரக்கன் வெளியில் வந்து வாயைத் திறந்தாலே எல்லாம் எரிந்து விடுவதால் இவன் எப்போது அழிவான் என்று அந்த ஊர் மக்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அந்த ஊரில் லேகாபாய், தாகுவாகா, மாசிலாகா, துயிவேசி என்ற நான்கு துணிச்சலான இளைஞர்கள் இருந்தனர். இந்த அரக்கனது வாயிலிருந்து கொஞ்சம் தீயை எடுத்து வைத்துக் கொண்டால் பல காரியங்களுக்குப் பயன்படுமே என்று எண்ணினர்.

''அவன் வாயிலிருந்து கொஞ்சம் தீயை எடுத்துக் கொண்டால் நன்றாக இருக்கும்,'' என்றான் துயிவேசி. ''ஆம், நமது மனைவிகளால் சுவையான பதார்த்தங்கள் சமைக்க முடியும்'' என்றான் தாகுவாகா. ''இருட்டில் வெளிச்சம் தெரியுமாறுச் செய்யலாம்,'' என்றான் மாசிலாகா. ''அப்படியானால், நாம் எல்லோரும்



முயற்சி செய்யலாம் வாருங்கள்,'' என்று அழைத்தான் லேகாபாய்.

உடனே நால்வரும் இதற்காகத் திட்டம் தீட்டினர்.

உலர்ந்த தென்னை மரத்து ஓலைகளை சேகரித்துச் சுருட்டி எடுத்துக் கொண்டு நால்வரும் அரக்கன் இருக்கும் குகைக்குள் தைரியமாகச் சென்றனர். குகைக்குள்ளே அரக்கன் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தான். அவன் வாயைத் திறந்து கொண்டு பெருமூச்சு விட்டுக் கொண்டு உறங்கும் போது, வாயிலிருந்து தீ வெளியே ஒளிவிட்டு சுடர்ந்து கொண்டிருந்தது. சத்தமின்றி மெதுவாக அவனருகில் நால்வரும் சென்றனர்.

மிக அருகில் சென்றதும் கையில் வைத்திருந்த தென்னை ஓலைகளை அவன் வாயருகே காட்டியதும், அவற்றில் உடனே தீப் பிடித்துக் கொண்டது. இதற்குள் திடீரென அரக்கன் விழித்துக் கொண்டு விட்டான். நான்கு இளைஞர்கள் தன் முன்னே நிற்பதையும் தென்னை ஓலைகள் தீப் பிடித்து எரிவதையும் கண்டு கோபத்தில் சீறியெழுந்து, ''என் வாயிலிருந்து தீப்பற்ற வைக்க என்ன தைரியம் உங்களுக்கு?'' என்று பயங்கரமாகக் கத்தினான்.

இதற்குள் நான்கு இளைஞர்களும் அங்கிருந்து தப்பித்தோம் பிழைத்தோம் என தலைகால் புரியாமல் ஓடத் தொடங்கினர். அரக்கன் அவர்களைத் துரத்த ஆரம்பித்தான். நால்வரும் ஓடி மற்றொரு குகையில் நுழைந்து அதன் வாயிலை ஒரு பெரிய பாறையினால் மூடி விட்டனர். அவர்களின் கையிலுள்ள தென்னை ஓலை மெதுவாக தீப் பிடித்து எரிந்து கொண்டிருந்தது.

இதற்குள் அரக்கன் இவர்கள் ஒளிந்திருந்த குகை வாசலில் நின்று வாயிலை அடைத்திருந்த பாறையை அகற்றுமாறு கூக்குரலிட்டான். அவன் வாயிலிருந்து வந்த தீப்பிழம்புகளால் அருகிலுள்ள செடிகொடிகள் தீப்பற்றி எரியத் தொடங்கின. சுற்றியுள்ள மரங்கள் எல்லாம் எரியத் தொடங்கியதால் அந்த வெப்பம்

தாங்காமல் எப்படியாவது குகைக்குள் நுழைய அரக்கன் துடித்தான். உள்ளிருப்பவர்களும் கையிலுள்ள எரியும் ஓலைகளுடன், அரக்கனிடமிருந்து எப்படித் தப்பிக்கலாம் என யோசித்தனர். ''நண்பர்களே, பாறையை நகர்த்துங்கள். நான் உங்களை ஒன்றும் செய்யமாட்டேன்,'' என்று அரக்கன் சொன்னாலும் தன்னிடமே வால் ஆட்டிய இந்த நால்வரையும் சும்மா விடக்கூடாது என்ற ஆத்திரத்தில் இருந்தான்.

இதற்குள் நால்வரும் ஓர் அவசரத் திட்டம் வகுத்து, குகை வாயிலிலிருந்த கல்லை இலேசாக நகர்த்தினர். ஆனால் அரக்கனால் அந்த இடைவெளியில் உள்ளே நுழைய முடியவில்லை. அந்த நால்வரை பார்க்க வேண்டும் என்ற ஆர்வத்தினால் தலையை மட்டும் இடைவெளி வழியே நுழைத்த அரக்கன், ''நண்பர்களே, இன்னும் கொஞ்சம் திறவுங்கள்'' எனக் கெஞ்ச அந்த நால்வரும் மிக வேகமாக பாறையை நகர்த்தி இடுக்கில் மாட்டியிருந்த அரக்கனின் தலையை நசுக்கி விட்டனர். தீக்கதிர் வீசும் அவன் பற்கள் உடைந்து தூள்தூளாயின. எப்போதும் அவன் வாயிலிருந்து வந்து கொண்டிருந்த தீயும் அணைந்து போனது. தலை நசுங்கிய அரக்கன் இறந்து வீழ்ந்தான்.

இப்போது அந்த நால்வரும், பாறையை அகற்றிவிட்டு கையில் எரியும் தென்னை ஓலைகளுடன் ஊரை நோக்கி வெற்றி முழக்கம் இட்டுக்கொண்டே ஓடினர். ''வெற்றி, வெற்றி அரக்கன் மடிந்தான். தீயும் நமக்குக் கிடைத்து விட்டது,'' என்று மகிழ்ச்சியுடன் ஊர் மக்களை நோக்கிக் கூவினர். அன்றிலிருந்து தீயைப் பயன்படுத்தி நல்ல வறுத்த, வேகவைத்த உணவுகள் எல்லாம் ஊர் மக்களால் சாப்பிட முடிந்தது.





# வைரமாலை

ஏலகிரி எனும் ஊரில் தனசேகரன் என்னும் வியாபாரியின் வீட்டில் சோமசேகரன் என்ற பதினான்கு வயதுச் சிறுவன் வேலை பார்த்துக் கொண்டிருந்தான். அவனது தந்தையும் வேலைக்காரராக அந்த வீட்டில் இருந்தவர்தான். தனது தந்தையின் இறப்புக்குப்பின், அவருடைய இடத்தில் சோமசேகரன் வேலை செய்ய ஆரம்பித்தான். அவனுடைய சிறிய வயதிலேயே தாயும் இறந்து விட்டாள். தனசேகரன் வீட்டோடு தங்கி வேலை பார்த்த சோமுவுக்கு வேளா வேளைக்கு சாப்பாடும், மாத சம்பளமும் கிடைத்து வந்தன. தனக்குக் கிடைக்கும் பணத்தை எல்லாம் சிறுவன் சோமு சேமித்து வைத்துக் கொண்டிருந்தான். அந்த வீட்டில் எல்லா வேலைகளையும் சோமுவே செய்து வந்தான்.

ஒருநாள் சோமு கிணற்றிலிருந்து நீர் எடுத்துக் கொண்டிருக்கையில் தனசேகரன் அவனை ''அடே சோமு, என்ன செய்கிறாய்! இன்னுமா பால் கறக்கவில்லை?'' என்று கேட்க திடீரென சோமு சற்றே கோபத்துடன், ''ஐயா, என் முழுப்பெயர் சோமசேகரன். என்னை இனி சோமு என்று அழைக்க வேண்டாம். என்னை மரியாதையாக நடத்துங்கள்'' என்றான்.

அவனது பதிலைக் கேட்ட தனசேகரன் திடுக்கிட்டார். இந்தச் சிறுவன் சோமுவா இப்படிப் பேசுகிறான் என்று அவருக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. இதற்குமுன் எத்தனையோ முறை ''சோமு'' என்றுதானே அழைத்திருக்கிறோம்! இன்று மட்டும் என்ன ஆயிற்று அவனுக்கு என யோசித்தார். பிறகு இதைப்பற்றி ஆராய்ச்சி செய்யலாம் என்று எண்ணி, ''சோமசேகரர் அவர்களே, தயவு செய்து பால் கறந்து கொண்டு வருகிறீர்களா?'' என்று போலியான

– கைலாசநாதன் –

மரியாதையுடன் அவனை அழைக்க, சோமுவும் பால் கறக்கச் சென்றான். சிறிது நேரங்கழித்து, தனசேகரனின் தாயார், ''டேய் சோமு, வீட்டில் காய்கறியே இல்லை. கடைக்குச் சென்று ஏதாவது வாங்கி வா,'' என்று கட்டளையிட, சோமு கோபத்துடன் வந்து, ''பையும், பணமும் கொடுங்கள்'' என்று விறைப்பாக மிரட்டும் குரலில் பேசினான். அவனது அதிகாரக் குரலைக் கேட்டு தனசேகரனின் தாயார் வியப்படைந்தாள். தூரத்திலிருந்து இதை கவனித்துக் கொண்டிருந்த தனசேகரனும் இந்தச் சிறுவனின் மாறுபட்ட செய்கைகளுக்கு ஏதோ காரணம் இருக்கிறதென்று ஊகித்து, அதை உடனடியாகக் கண்டறிய தீர்மானித்தார்.

அன்றிரவு எல்லோரும் உறங்கிக் கொண்டிருக்கும் போது தனசேகரன் மெதுவாக சோமு தங்கும் அறையின் சன்னல் வழியே எட்டிப் பார்த்தார். பார்த்தவுடன் அவருடைய சந்தேகத்திற்கு விடை கிடைத்து விட்டது. சோமு கையில் ஒரு வைரமாலையை வைத்துக் கொண்டு உன்னிப்பாக அதையேப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒருமுறை சுள்ளி பொறுக்க காட்டுக்குச் சென்றபோது, ஒரு மரப் பொந்தில் காக்கையொன்று ஒளித்து வைத்திருந்த வைர மாலை சோமுவின் கண்ணில் பட்டுவிட அதை சோமு எடுத்துக் கொண்டு வந்து விட்டான். சோமுவின் இந்தத் திடீர் மாற்றத்திற்கு அவனுக்குக் கிடைத்த இந்த வைரமாலையே காரணம் என



அவன் எசமானருக்குப் புரிந்து விட்டது. ஒருநாள் தனசேகரன், ''சோமசேகரர் அவர்களே, நம் வீட்டுத் தோட்டத்தில்உள்ள வாழைக்குலைகளை சந்தையில் விற்று விட்டு வருவோமா?'' என்று கேட்க, சோமுவும் ''சரி, வருகிறேன் ஐயா'' என்று அவரோடு சந்தைக்குக் கிளம்பினான். வாழைக்குலைகளை சந்தையில் விற்றபிறகு, சோமு மெதுவாகத் தன் எசமானரிடம், ''ஐயா, சந்தையை ஒருமுறை நன்றாகச் சுற்றிப் பார்த்து விட்டு வருகிறேன்,'' என்று சொல்லி விட்டுப் புறப்பட்டான்.

அரைமணிநேரம் சந்தையில் பல இடங்களில் சுற்றி விட்டுத் திரும்பிய சோமு, ''ஐயா, வீட்டுக்குப் போகலாம்,'' என்று மெதுவான குரலில் முனகினான். ''உங்கள் விருப்பப்படியே நடப்போம் சோமசேகரர்

அவர்களே,'' என்று தனசேகரன் போலியான பணிவுடன் கூற ''ஐயா, நீங்கள் எனக்கு எசமானர்'' என்று பழையபடி மரியாதையான குரலில் சோமு பதில் அளித்தான். தொடர்ந்து ''இந்த உடலும் உயிரும் நீங்கள் எனக்கு இட்ட பிச்சை. நீங்கள் இல்லையென்றால் இந்த சோமு எங்கே? என்னைப் பழையடி சோமு என்றே கூப்பிடுங்கள்,'' என்று சொன்ன சோமுவை மிகுந்த ஆச்சரிய த்துடன் தனசேகரன் நோக்கினார்.

சோமுவே தொடர்ந்து ''ஐயா, நீங்கள் நினைப்பது புரிகிறது. நான் முழு உண்மையையும் கூறிவிடுகி றேன். ஒரு வாரத்திற்கு முன் எனக்கு இந்த வைரமாலை கிடைத்தது. இது கிடைத்ததிலிருந்து இதை விற்று பெரிய பணக்காரன் ஆவது போல கனவு காணத் தொடங்கினேன். அதிலிருந்து எனக்கு கொஞ்சம் தலைக்கனம் உண்டாயிற்று. ஆனால் இன்று அதை விற்க முயற்சிக்கையில் நகைக்கடைக்காரர் இந்த மாலை போலி வைரம் என்று சொல்லி விட்டார். என் கனவுகள் எல்லாம் சிதறிவிட்டன, நான் அவ்வாறு நடந்து கொண்டதற்கு தயவு செய்து என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள் என்னை முன்பு போலவே நடத்துங் கள்'' என்று கூறினான்.

இதைக்கேட்ட தனசேகரன் சோமு வைத் தட்டிக் கொடுத்து அன்புடன், ''சோமு, நீ உழைத்தால் ஒன்றல்ல, இதுபோல் இன்னும் பல வைர மாலைகளை வாங்க முடியும். இந்த வைரமாலை நிஜமோ போலியோ, தெரியாது. ஆனால் இதை இழந்தவர் மனம் என்ன பாடுபடும் என்று யோசித்தாயா? சோமு, உழைத்து சம்பாதிப்பதுதான் நம்முடன் நிலை யாக இருக்கும்.

இப்படிப்பட்ட குறுக்கு வழியில் வரும் பொருட்கள் உண்மையான செல்வமல்ல. இவற்றால் நமது நடத்தை மாறவும் கூடாது. உண்மையாக உழைத்து சம்பாதிக்க முயற்சி செய்,'' என்று அறிவுரை கூறினார். மனம் திருந்திய சோமுவும் சரியென்று தலையசைத்தான்.





# சாட்சி

பெரிய நகரமான வல்லபபுரியில் பொருட்கள் வாங்கவும் விற்கவும் அக்கம்பக்கத்திலுள்ள ஊர்களில் இருந்து ஏராளமான வியாபாரிகள் வருவதுண்டு. ஒரு சமயம் பக்கத்து ஊரிலிருந்து மாணிக்கம் என்ற வியாபாரி கையில் ஐநூறு ரூபாய் பணத்துடன் தனக்குத் தேவையான பொருட்கள் வாங்க வல்லபபுரிக்கு வந்திருந்தான். பிரதானக் கடைத் தெருவில் அவன் சென்று கொண்டிருந்த போது, திடீரென ஒரு பெண்மணி பாய்ந்து வந்து அவன் கையைப் பிடித்துக் கொண்டு ''என்னிடமிருந்து பணத்தைத் திருடிக் கொண்டு எங்கே சுற்றுகிறாய்?'' என்று உரக்கக் கத்தினாள். இதைக் கண்டு மாணிக்கம் வெலவெலத்துப் போய் விட்டான். இதற்குள் அவர்களைச் சுற்றி ஒரு கூட்டம் கூடி விட்டது. ''நானா! உன்னிடமிருந்து திருடினேனா? இல்லவேயில்லை'' என்று மறுத்தான் மாணிக்கம். இருவரில் யார் சொல்வது உண்மை என்று தெரியாததால் பக்கத்தில் உள்ள நீதிமன்றத்திற்குச் செல்லும்படி அவர்கள் ஆலோசனை கூறினர். உடனே அந்தப் பெண்மணி மாணிக்கத்தின் கையை கெட்டியாகப் பிடித்துக் கொண்டு நீதிமன்றத்திற்கு இழுத்துச் சென்றாள்.

''ஐயா நீதிபதி அவர்களே, நடுக் கடைத் தெருவில் இந்த ஆள் என்னிடமிருந்து ரூபாயைப் பிடுங்கிக் கொண்டு விட்டான். எனக்கு என்னுடைய பணத்தைத் திருப்பிக் கொடுக்கச் சொல்லுங்கள்'' என்றாள் அந்தப் பெண்மணி ''ஏதாவது சாட்சி உண்டா?'' என்று கேட்க, இல்லை என்று அவள் தலையாட்டினாள். ''நீ ஏதாவது சொல்ல விரும்புகிறாயா?'' என்று நீதிபதி மாணிக்கத்தைப் பார்த்துக் கேட்க, மாணிக்கம் ''ஐயா நான் ஊருக்குப் புதியவன். சில பொருட்கள் வாங்குவதற்காக இன்று தான் இங்கு வந்தேன். என்னிடம் ஐநூறு ரூபாய் உள்ளது. ஆனால் இது என்னுடையது தான்,'' என்று

- 25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை -

பதிலளித்தான். நீதிபதிக்கு மாணிக்கம் சொல்வது உண்மையென்று தெரிந்து விட்டது. இருந்தாலும் இதைத் தந்திரமாக தீர்க்க எண்ணி, ''மாணிக்கம், நீ சொல்வது நம்பும் படி இல்லை. ஆதலால் அவளுடைய பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடு'' என்று கூறிவிட்டார். வேறு வழி இன்றி தன்னிடம் இருந்த பணத்தை எல்லாம் அந்தப் பெண்ணிடம் மாணிக்கம் கொடுத்து விட்டான். அந்தப் பெண்ணும் மகிழ்ச்சியுடன் சென்று விட்டாள்.

அவள் சென்றதும், நீதிபதி மாணிக்கத்தை கூப்பிட்டு, ''அவளைப் பின் தொடர்ந்து சென்று உன்னுடைய பணத்தை அவளிடமிருந்து பிடுங்கிக் கொள். நான் உனக்கு உதவி செய்கிறேன்'' என்றார்.

மாணிக்கமும் அதன்படியே அந்த பெண்ணைப் பின் தொடர்ந்தான். சற்று தொலைவு சென்றதும் அவளிடமிருந்து பணத்தைப் பிடுங்க முயற்சி செய்தான்.

உடனே அந்தப் பெண் கூச்சல் இட்டுக் கூட்டத்தை கூட்டி விட்டாள். மாணிக்கத்தை மீண்டும் நீதிபதியிடம் அழைத்துச் சென்றாள். ''நீதிபதி அவர்களே, நீங்கள் தீர்ப்புக் கூறி வாங்கிக் கொடுத்தப் பணத்தை இவன் மீண்டும் பிடுங்கப் பார்த்தான்'' என்றாள். ''நீ சொல்வது உண்மையா? ஏதாவது சாட்சி உண்டா?'' எனக் கேட்க ''இவர்கள் அனைவரும் சாட்சிகள்'' என்றாள். ''அவர்களைக் கேட்கத் தேவைஇல்லை. பணம் இப்போது யாரிடம் உள்ளது?'' என்றார் நீதிபதி. ''என்னிடம் தான் உள்ளது. அவனால் பறிக்க முடியவில்லை'' என்றாள்.

''பெண்ணே, கவனித்துக் கேள்'' என்ற நீதிபதி ''கடைத்தெருவில் பலர் நடுவில் உன்னிடமிருந்து அவனால் பணம் பறிக்க முடியாது. இதுதான் உண்மை. அதேபோல் நீ முன்பு மாணிக்கத்தின் பணத்தை எடுத்துக் கொண்டு அவன் மீது குற்றம் சாட்டினாயே, அதை அவனிடம் திருப்பிக் கொடுத்து விடு.

இனி இவ்வாறு பொய்யாக யார் மீதாவது குற்றம் சாட்டினால், உன்னை சிறைக்கு அனுப்பி விடுவேன்,'' என்று அவளை எச்சரித்துத் தீர்ப்பு வழங்கினார்.



காட்டில் கிடைத்த அந்தக் குழந்தை இளவரசன் தான் என்று முனிவருக்குத் தெரிந்து விட்டது. பட்டத்து ராணி இறந்ததும், குழந்தையின் அரசுச் சின்னங்களான சங்கிலியையும், பதக்கத்தையும் மன்னர் சாந்திதேவரின் நம்பிக்கைக்குரிய சுகதேவனிடம் கொடுத்து வைக்கிறார். சாந்திபுரத்து அரியணையை கைப்பற்றிஉள்ள வீரசிம்மன் அமிருதபுரியின் மீது படை யெடுக்கும் போது அவனுடைய வீரர்கள் நந்தினி நதியின் வெள்ளத்தில் சிக்கிக் கொள்கின்றனர்.

10

# சூர்யா

வீர இளவரசனின்
துணிகரச் செயல்கள்

ஓவியம் : காந்தி அய்யா

அமிருதபுரியின் படைவீரர்கள் நந்தினி வெள்ளத்தில் சிக்கிய சாந்திபுரத்து வீரர்களைக் காண்கின்றனர்.

உடனே நதிக்கரைக்குச் சென்று உதவுகின்றனர்.

மிகவும் நன்றி!

தயவு செய்து என்னைக் காப்பாற்றுங்கள்

தப்பித்து விடலாம் போல் தோன்றுகிறது

முக மூடியணிந்தவர்களா உங்களை பத்திரமாகக் காப்பாற்றினார்கள்?

ஆம் அரசே. எனக்கு ஒரு சந்தேகம்.

என்னுடைய மாப்பிள்ளை இன்னும் உயிருடன் இருக்கிறார் என்று எனக்குத் தோன்றுகிறது.

வசந்தன் இங்குதான் சுற்றிக் கொண்டே இக்கிறான். அவன் ஏதாவது தகவல் கொண்டு வருவான் என நம்புகிறேன்

வீரசிம்மன் மறுமுறை படையெடுப் பானோ என்று பயம் தோன்றுகிறது. வசந்தன் இதைப் பற்றி கண்டு பிடிக்க முடிந்தால் நல்லது.

முயற்சி செய்வோம் அரசே.


அமிருதபுரியின் மீது மீண்டும் ஒரு முறை படையெடுக்க வேண்டும்
நமக்கு இன்னும் ஆயுதங்கள் தேவை
சந்திரகிரிக்கு அரிசி கொடுத்து விட்டு அதற்கு பதிலாக அவர்களிடமிருந்து ஆயுதங்கள் வாங்கிக் கொள்வோம்
வரி என்ற பெயரில் பலவந்தமாக நிறைய அரிசி சேகரிப்போம்
ஆம் அரசே! இந்த ஜமீன்தாரர்கள் ஏழைகளுக்கு இலவசமாக அரிசி கொடுக்கிறார்கள்
அரிசியை மக்களிடம் இருந்து கவர்வது பற்றி வீரசிம்மனும் அமரசிம்மனும் நீண்ட நேரம் விவாதிக்கின்றனர்.
மற்றவர்கள் தங்கள் விளைச்சலில் சரிபாதி நமக்குக் கொடுப்பார்களேயானால் ஜமீன்தார்களால்.....
தாராளமாக மூன்றில் இரண்டு பங்கு தரமுடியும்.
கிராமத்தார்களுக்குத் தேவையான அளவு அரிசியை ரகுநாதன் விற்று விடுகிறான்.
பயப்படாதே ஹேமா, பணம் பிறகு கூட கொடுத்துக் கொள்ளலாம். அவர் மிகவும் நல்லவர்
அரிசி விற்பதை நிறுத்து
முதலில் மன்னருக்கு வரியாக அரிசி கொடு
இது ஒரு புதியவரி. எங்களுக்கு ஆயுதங்கள் தேவை
நான்தான் ஏற்கனவே வரி செலுத்தி விட்டேனே


பசியால் இறந்து விடுவோம்
எங்களுக்கு அரிசியைக் கொடுத்து ஆயுதங்கள் வாங்க வேண்டும்
ஐயா, எங்கள் அரிசியை எடுத்துச் செல்லாதீர்கள்
உங்களை பற்றி கவலை இல்லை.
சாந்திபுரத்தில் விளையும் அரிசி சந்திரகிரிக்கு ஏன் செல்ல வேண்டும். புரியவில்லையே!
ஐயா, தயவு செய்து அரிசியை எடுத்துச் செல்லாதீர்கள். உங்களைக் கெஞ்சிக் கேட்கிறோம்
எங்கள் பின்னால் வராதே. அரிசி திருப்பிக் கொடுக்க முடியாது.
அரிசியேற்றிய வண்டிகள் மலைப்பாதையில் சென்று கொண்டிருக்கின்றன.
திடீரென ஒருவன் வீரர்களின் தலைவனை குதிரையிலிருந்து கீழே தள்ளுகிறான்.
தாக்கு... அடி....

தலைவன் கீழே விழுகிறான்

கிராமத்தினர் அனைவரும் வீரர்களை கட்டி விடுகின்றனர்.

உங்களை ஒன்றும் செய்ய மாட்டோம். எங்களை அரிசி எடுத்துக் கொண்டு போக விடு

தேவைக்கு ஏற்ப எடுத்துச் சென்று பணத்தை ஜமீன்தாரிடம் கொடுத்து விடுங்கள்

தயவுசெய்து எங்களை விட்டு விடு. நாங்கள் எங்கள் தலைவர் சொன்னபடி நடந்தோம்

இப்போதில்லை. முதலில் இவர்கள் வீடு செல்லட்டும்

தூக்கிலிருந்து தப்பித்தானே, அந்த ஆள்தானா இவன்!

நாங்கள் தகவல் அனுப்புகிறோம். நீங்கள் விரைவிலேயே விடுவிக்கப் படுவீர்கள்

தொடரும்.

# தண்ணீரை வீணாக்காதே



வீணா பள்ளி விடுமுறையில் சென்னையிலுள்ள தன் மாமா சுரேஷ் வீட்டுக்கு சென்றிருந்தாள். மாமா வீட்டில் மாமா, ரேணு மாமியைத் தவிர அவர்கள் பிள்ளைகளான அஜய், விஜய் ஆகியோரும் இருந்தனர்.

வீணா குளிக்க விரும்பிய போது ரேணு மாமி குளியல் அறைக்கு வீணாவை அழைத்துப் போய் அங்கு வாளி களில் சேமிக்கப் பட்டு இருந்த தண்ணீரை காண்பித்து, ''இங்கு குழாயில் காலையும் மாலையும் ஒரு மணி நேரம் மட்டுமே தண்ணீர் வரும். அதைத்தான் பிடித்து வைத்திருக் கிறோம். தண்ணீரை வீணாக்காமல் ஜாக்கிரதையாக உபயோகம் செய்.'' என்றாள். பல வாளிகளில் தண்ணீர் நிரப்பப்பட்டு, அந்த குளியலறையில் நிற்கவே இடமில்லை. அதைக்கண்ட வீணா, ''மாமி, எங்கள் ஊரில் குழாயில் எப்போதும் தண்ணீர் வருகிறது. ஆகையால் கஷ்டமில்லை. ஆனால் நீங்கள் எப்படி சமாளிக்கிறீர்கள்?'' என்றாள். ''வேறுவழி இல்லை வீணா. இங்கு போதிய அளவு தண்ணீர் கிடைப்பது கஷ்டம். ஆகவே நாங்கள் கிடைக்கும் தண்ணீரை சிக்கனமாக உபயோகித்து சமாளிக்கிறோம். துலக்க வேண்டிய பாத்திரங்களை முன்னமேயே தண்ணீரில் ஊறவைப்பதால், அதைத் துலக்க அதிகம் தண்ணீர் செலவாகாது. காய்கறி களை நேரடியாக குழாய் தண்ணீரில் கழுவாமல், ஒரு பாத்திரத்தில் தண்ணீர் பிடித்து அதில் கழுவுகிறோம். தினமும் துணி துவைப்பதற்கு வாஷிங்மெஷினை உபயோகிக்காமல், துணிகளை சேர்த்து வாரம் ஒருமுறை மட்டுமே துவைக்கி றோம். ஒழுகுகிற குழாய்களை உடனடி யாக பழுது பார்க்கிறோம். மழைத் தண்ணீர் சேகரிக்கும் சாதனமும் எங்கள் வீட்டில் உள்ளது'' என்றாள் மாமி. இதைக் கேட்ட வீணா ''மாமி தண்ணீரின் அருமை எனக்கு இன்றுதான் தெரிந்தது. நானும் இனிமேல் தண்ணீரை சிக்கன மாக செலவழிப்பேன்'' என்றாள்.

## உங்கள் விஞ்ஞானம்

### ரீங்காரமிடும் பறவை

''ம்ம்ம்......'' என்ற சத்தம் தோட்டத்தில் கேட்டால், ஏதோ வண்டு தான் அருகில் பறந்து வருகிறதோ நம்மைக் கொட்டி விடுமோ என்று எப்போதும் பயப்படத் தேவையில்லை. வண்டைப் போலவே ரீங்காரமிடும் ஒரு பறவை உண்டு. இதன் சிறகுகளை அதிவேகமாக வினாடிக்கு 50 முதல் 60 முறை அடித்துக் கொள்வதால் தான், வண்டின் ரீங்காரம் போன்ற சத்தம் உண்டாகிறது. தென் அமெரிக்காவில் உள்ள சில ரீங்காரமிடும் பறவைகள் ஒரு நிமிடத்திற்கு 5,000 முறை கூட சிறகுகளை அடித்துக் கொள்வதுண்டு. குருவியைப் போன்ற மிகச்சிறிய உடல் அமைப்பும், நீளமான மிக மெல்லிய அலகும் கொண்ட பறவையான இது அமெரிக்கா வில் அதிகமாகக் காணப்படுகின்றது.

ஹெலிகாப்டர், விமானம் எப்படிப் பறக்குமோ, அதுபோல் செங்குத்தாக மிக விரைவில் பறக்கும்.

மிகவிரைவாக சிறகுகளை அடித்துக் கொண்டு பறப்பதால் இந்தப் பறவை 10 நிமிடத்திற்கு ஒருமுறை ஏதாவது சாப்பிட்டுக் கொண்டேயிருக்கும்.



## உங்கள் சுற்றுப்புறம்

### பாலைவனப் பிராணிகள்



வெய்யில் கொளுத்தும் வறண்ட பாலைவனத்தில் கூட சில உயிரினங்கள் வசிக்கின்றன. அது போன்ற அறிய உயிரினங்களில் அகாமா என்ற பாலை வனப் பல்லியும் ஒன்றாகும். பகலில் கடும் வெய்யிலிலிருந்தும் இரவில் கடுங் குளிரிலிருந்தும் தப்பிக்க தன்னுடைய கொடுக்கு போன்ற முன்னங்கால் களினால் 6 அடி ஆழம்வரை மணலில் தோண்டி தனக்கென்று பொந்து தயாரித்துக் கொள்ளும். கத்தி போல் கூர்மையாக இருக்கும் தன் வாலினால் எதிரிகளைத் தாக்கக் கூடிய சக்தி இதற்கு உண்டு.

தாவரங்கள் மிகமிகக் குறை வாயிருந்தும், நீர் நிலைகளே இல்லாமல் இருந்தும் கடும் வெய்யில் அடித்தும் கூட எப்படியோ சில உயிரினங்கள் பாலை வனத்திலும் உயிர் வாழ்ந்து சமாளிக்கின்றன.

## உங்களுக்குத் தெரியுமா?

### கொட்டைப் பாக்கு

பாக்கு மரத்தில் விளையும் கொட்டைப் பாக்கு பல விதங்களில் பயன் படுகிறது. பேனாவுக்குப் பயன் படும் கருப்பு, சிவப்பு வண்ண மை தயாரிக்க இது பயன்படுகிறது. இதில் இருந்து பற்பொடியும் தயாரிக்கலாம்.

பாக்கு மரம் கிளைகள் ஏதும் இல்லாமல், 50 முதல் 60 அடி உயரம் வளரக் கூடியது. மரத்தின் அடிப்பாகம்



சுமார் 6 அங்குல விட்டம் உள்ளது. பயிரிட்ட ஐந்து ஆண்டுகளிலேயே மரமாகி, பழங்கள் உண்டாகின்றன. ஒரேயாண்டில் 300 பழங்கள் வரை ஒரு மரத்தில் உண்டாகும். மழை அதிகம் பெய்யும் மாநிலங்களான கேரளம், மேற்கு வங்கம், அஸ்ஸாம் ஆகிய மாநிலங்களில் இவை நன்கு செழித்து வளர்கிறது.

## அறிவு வளர

### பாரதப் பாராளுமன்றம்

1. லோக் சபாவின் மொத்த அங்கத்தினர்கள் எத்தனை?





2. பிரதம மந்திரி யாரால் நியமிக்கப் படுகிறார்?

3. வாக்களிக்க எத்தனை வயது நிறைந்திருக்க வேண்டும்?





4. துணை ஜனாதிபதியை யார் தேர்ந்தெடுக்கிறார்கள்?



5. பாரதநாடு அரசியல் நிர்ணயச் சட்டத்தில் எவ்வாறு விவரிக்கப் பட்டுள்ளது??





6. அரசியல் நிர்ணயச் சட்டத்தில் எத்தனை மனித அடிப்படை உரிமைகளுக்கு உத்திரவாதம் அளிக்கப் படுகின்றது?

(விடைகள் 66ம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி



இந்த போட்டோக்களுக்கு
தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ
அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி
அனுப்புங்கள்.



TAJY PRASAD



NARAYANA MURTHY TATA

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு ஜூலை 2004 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

மார்ச் 2004 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில்
வெற்றி வெற்றவர் :

**திருமதி கோமதி நாராயணா**
No 3-G/95 ஃப்ளாட் 201
சுமன் அபார்ட்மெண்ட்,
கோரேபேத், நாக்பூர்-10
மகாராஷ்டிரா-440 010.

பரிசு பெற்றவை





பசியால் வாடுகிறோம்,
உணவுக்கு வழியென்ன?
பளுவுடன் செல்கிறோம்,
வெளியேறும் வழியெங்கே?

## 'அறிவு வளர?' விடைகள் (பக்கம் 65)

1. 543 (கூடுதலாக இரண்டு நியமிக்கப்பட்ட நபர்கள்)
2. பாரத ஜனாதிபதி, பாராளுமன்ற அங்கத்தினர்கள் இணைந்து ஏகமனதாக பிரதம மந்திரியை தேர்ந்தெடுப்பார்கள்
3. 18 வயது
4. லோக்சபா, ராஜ்யசபா அங்கத்தினர்கள் இணைந்து
5. பொது உடமைத் தத்துவத்தை கடைப்பிடிக்கும் சுதந்திரமான மதச்சார்பற்ற ஜனநாயகக் குடியரசு
6. ஏழு

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)

ENTER



& CHANDAMAMA

# OLYMPIC QUIZ CONTEST

## AND WIN ATTRACTIVE PRIZES!

BUMPER PRIZE



Acer Computer

1st PRIZE



3 Cameras

2nd PRIZE



10 calculators

*Beginning from May, your favourite monthly magazine Chandamama in English and all its language editions will carry Nutrine - Chandamama contests for 6 months. All you have to do is to choose the right answers,* ***fill in the entry form and mail this page, along with 5 wrappers of 'Nutrine Chocolate Eclairs'****, before the closing date, to* ***Nutrine Chandamama Contest, Chandamama India Limited, 82, Defence Officers's Colony, Ekkatuthangal, Chennai - 600 097.***

*It is an all India contest. Every month there will be different questions. There are fabulous prizes to be won. Watch out every month and participate. There will be 3 Konica cameras, 10 Calculators, and 50 Nutrine sweet hampers as first, second and third prizes respectively every month. At the end of the 5 monthly contests, the 6th contest offers a Bumper Draw and the winner will get a Personal Computer, in addition to the regular prizes. Participation in all the 6 months only will entitle the entries for the Bumper Draw. Results of the Bumper draw will be announced in December by post.*

## NUTRINE CHANDAMAMA OLYMPIC QUIZ CONTEST

Study the questions carefully and tick [v] the correct answer in the blanks provided for each question.

1. The Olympic Games was revived after a gap of more than 2,200 years. Where was it held?
   London [ ] Paris [ ] Athens [ ]
2. Which country won the most medals in the first of the Modern Olympic Games?
   England [ ] Greece [ ] USA [ ]
3. In which Olympic Games was the Olympic Flame reintroduced?
   Amsterdam [ ] Berlin [ ] Moscow [ ]
4. Which Olympic Games had the maximum number of participating nations?
   Sydney [ ] Atlanta [ ] Seoul [ ]
5. You will find, in the advertisement of Nutrine appearing in this issue, some children enjoying a tasty nutrine chocolate. How many times does the leter 'R' appears in that advertisement?
   3 [ ] 6 [ ] 8 [ ] 9 [ ]





DID YOU KNOW?

OLYMPIA, in Greece, was believed to be the abode of the Greek Gods. Sports festivals were a way of life in Greece as far back as 1370 B.C. According to Greek mythology, Kranos, a Greek God, and Zeuss, the father of Greek Gods, fought on Mount Olympus for the possession of the Earth. Zeuss won and threw a great sports party to celebrate his victory. This is how Olympic Games began.

***Contest Rules :-***

● Employees of Nutrine, Chandamama and their relatives are not eligible for the contest ● The selection of the Judges will be at the sole discretion of Nutrine ● Children of Indian Origin below 15 years age group alone are eligible for the contest ● Nutrine reserves their exclusive right to extend or preclose the contest ● Contestants age proof to be supported by date of birth certificate ● Winners will be selected by draw among correct entries ● Winners will be notified individually ● No cash compensation is allowed in place of prize articles ● Warranty of prize articles are subject to the respective manufacturer ● You can send only one entry per month ● You can participate in any or all of the 6 contests ● No correspondence other than entry forms will be accepted ● Your signing the coupon will mean that you agree to the rules and regulations of the contest given on the coupon ● Entries reaching us after the last date mentioned will be disqualified ● If there are no all correct enries in any event, the maximum number of correct answers will be considered and the entries will go into the lot ● All decisions made by the judges will be final.

**CLOSING DATE : 31ST MAY 2004**

Your Name : ..................................................................

Age : ......... Class: ................ Date of Birth : .......................

Home address and PIN code : ...............................................

..................................................................................

Your signature: ..........................................................





**India's largest selling sweets and toffees.**



